மேல், புணர்ச்சியுற்ற அன்னங்களது புளகிப்பால் வீழ்ந்த இளந்தோகைகளைச் செறித்து இரட்டையாக விரிக்கப்பெற்ற பள்ளியிடையே, கோப்பெருந்தேவியாகிய இளங்கோவேண்மாள் தூக்கமென்பதின்றித் தனித்திருக்க, அத்துயரைச் செங்குட்டுவனது வடநாட்டு வெற்றியை அறிந்தவராகிய செவிலிமார்கள் 'அன்னாய்! காதற்கொழுநனைக் காணாதிருந்த நின்கவலையை இனி யொழியக்கடவாய்' என்று கூறிப் பாசுரங்களோடு சேர்த்துப் பல்லாண்டு பாடுவாராயினர். அவ்வாறே, அரசிக்கு ஊழியஞ்செய்யுஞ் சிந்தரும் கூனருஞ் சென்று அடிவணங்கி 'தேவீ! எம்பெருமான் வந்துவிட்டனன்; இனி நீ முகமலர்ச்சியுடன் கூந்தலில் நாளொப்பனைபெற்று நலம்பெற விளங்குக' என்றார். இங்ஙனம் ஆயத்தார் அரசியின் பிரிவாற்றாநிலையை ஒருசார் ஆற்றிநிற்க, மலைகளிற் புனங்காவல்செய்யுங் கானவன் ஆங்கு மூங்கிலிற்கட்டப்பட்ட தேனையுண்டு களித்து அக்களிப்பால் கவண்விட்டுக் காவல் புரிதலை நெகிழ்ந்தமையின், அச்சமயமறிந்து செழித்தபுனக் கதிர்களை உண்ணுதற்கு வந்த பெரியயானைகள் நல்லதுயிலடையும்படி மலைமகளிர் புனப்பரண்மேலிருந்துகொண்டு 'வடதிசைச்சென்று வாகையுந்தும்பையுஞ் சூடிய போர்க்களிறுகள் திரும்பும்வழி சுருங்கக்கடவது' என்று தாந்தாம் அறிந்தவாறு பாடிய குறிஞ்சிப் பாட்டுக்களும், 'வடவாசரதுகோட்டைகளைத் தகர்த்துக் கழுதைகளை ஏரிலே பூட்டியுழுது கொள்ளைவிதைத்த உழவனாகிய குடவர்கோமான் நாளைவந்து விடுவான்; ஆதலாற் பகடுகளே! நுகம்பூண்டுழுது நாட்டைப் பண்படுத்துவீராக; பகைமன்னரைச் சிறைநீக்கும் அவன் பிறந்தநா ளொப்பனையும் வருகின்றது' என்று பாடும் உழவரது ஒலியமைந்த பாடல்களும், அரசனது ஆனிரைகளைக்

காக்கும் கோவலர்கள், குளிர்ந்த ஆன்பொருநையாற்றில் நீராடுமகளிரால் விடப்பட்ட வண்ணமுஞ்சுண்ணமும் மலரும் பரந்து இந்திரவிற்போல்விளங்குகின்ற பெரிய துறையருகி லுள்ள தாழைமரங்களின்மேல் இருந்துகொண்டு தம் பசுக் களை அப் பெருந்துறையிற் படியவிட்டுத் தாமரைகுவளை முதலிய பூக்களைத் தலையிற்சூடியவராய் 'ஆனிரைகளே! வில்லவனாகிய நம் வேந்தன் வந்தனன்; அவன் இமயப்பக்கத் தினின்று கொணர்ந்த பெருத்த பசுநிரைகளோடு நீரும் நா ளைச்சேர்ந்து மகிழக்கடவீர்' என்னுங் கருத்துப்பட ஊதும் ஆயரது வேய்ங்குழலோசையும், வெண்டிரைகளால் மோதப் பட்ட கடற்கரைக்கழிகளின் பக்கத்துள்ள புன்னைக்கீழ் வலம் புரிச்சங்கமீன்ற முத்துக்களை கழங்காக நெய்தனிலமகளிர் தங் கைகளில் ஏந்திக்கொண்டு, நெடுநாட்பிரிந்த நம் மரசி யோடு கூடிமகிழும்படி வானவனாகிய நம் வேந்தன் வெற்றி யோடும் மீண்டனன்; அவன் சூடிய தும்பையையும் பனம் பூவையும் வஞ்சிநகரையும், நங்கைமீர்! நாம் பாடுவோமாக' என்று நுளைச்சியர் பாடிய இனிய பாடல்களுமாக நால்வகை நிலங்களினின்றும் எழுந்த இன்னிசைகளைக் கூர்ந்து கவனித் துக்கொண்டு உறங்காதிருந்த கோப்பெருந்தேவியானவள், தன் கைவளைகளைச் செறித்தணிந்துகொள்ளவும், நகரில்வலம் புரிச்சங்கங்கள் வலமாகவெழுந்து முழங்கவும், செங்குட்டு வன் முத்துமாலைகளமைந்த வெண்கொற்றக்குடையின் கீழ் வாகையணிந்த சென்னியோடும் தன் பட்டத்தியானையின் மேல் விளங்கியவனாய், குஞ்சரங்கள் பூட்டிய இரதங்களுடன் கோநகர் முழுதும் வந்தெதிர்கொள்ள வஞ்சிமூதூரிற் பிர வேசஞ்செய்து தன் கோயிலை அடைவானாயினன்.

## 6-ம் அதிகாரம்:—

# செங்குட்டுவன்

## பத்தினிக்கடவுளைப் பிரதிஷ்டித்தல்.

### 5. நடுகற்காதை.



தண்மதிபோன்றதும் பொன்னாலாகியதுமான வெண் கொற்றக்குடையால் மண்ணகத்தைக் குளிர்வித்த நிலந்தரு திருவினெடியோனாகிய செங்குட்டுவன், விஜயம் விளங்கும் அவ் வஞ்சிமாநகரிற் புகுந்தபின்னர், மகளிரெல்லாங்கூடி மலர்களைப் பலியாகத்தூவித் திருவிளக்குகளைக்கொணர்ந்து நின்று 'உலகமன்னனாகிய நம்மரசன் நீடுவாழ்க' என்றேத் தும்படி, மாலைக்காலமும் வந்தது. பலரும் தொழத்தக்கதும் மலர்கள் விரிதற்குக் காரணமாகியதுமான அவ்வழகிய காலத் தே பனம்பூங்கண்ணியைப் பூமாலையோடணிந்தவர்களும் தம் அரசனது போர்வினையை முடித்தவர்களுமான வாள்வீரரது யானைக்கோடழுத்தினவும் வேல் கணைகளாற் கிழிப்புண்டு புண்பட்டனவுமான மார்புகளை, அவர்கள் வீரபத்தினியர் தம் அழகிய தனங்களால் வேதுகொண்டு ஆற்றுவித்தனர். இங் ஙனம் ஆற்றுவிக்க அவ்வீரர்கள் மன்மதபாணம் பாய்ந்தவர் களாய், 'இம்மகளிரது கடைக் கண்கள் முன்பு நமக்குப் பாசறைக்கண்ணே வருத்தஞ்செய்தனவாயினும், இம் மாலைக் காலத்து அதற்கு மருந்துமாயுள்ளன' என்று புகழ்ந்தேத்த, அதுகேட்டு அம்மகளிர் தம் பவளவாயினின்று நிலவெழக் கடைக்கண்ணோக்குடன் புன்சிரிப்பாகிய விருந்தூட்டி மகிழ் வித்தனர். மற்றுமுள்ள இளைஞரான வீரர்கள் இசைவல்ல

மகளிரது இன்பக்கடலிலாடித், தங்குலைந்த கோலத்தைக் கண்ணாடியாற் றிருத்திக்கொண்டு யாழ்தழுவிக் குறிஞ்சிப்பண்ணை இனிதுபாடிய அங்நங்கையரால் கானவிருந்து செய்யப் பெற்றனர்.

இங்ஙனம், அவ்வழகிய மாலைக்காலமானது வீரர்க்கெல்லாம் இன்பவிருந்தயர்வித்துப் பின், சேரன்-செங்குட்டுவன் குடிகளது குறைதீர வெளிப்போதருங் காலத்து விளங்கும் அவனது திருமுகம்போல, உலகந்தொழும்படி தோன்றிய பூர்ணசந்திரனை அவ் வஞ்சிமூதூர்க்குக் காட்டித் தான் நீங்கியது. அப்போது மைந்தரும் மகளிருந் தன்னாணைப்படியே நடக்குமாறு ஐங்கணைக்கிழவனான மன்மதன் அரசுவீற்றிருந்த நிலாமுற்றங்களும், பூம்பள்ளிகளும், நடனசாலைகளும், மலர்ப்பந்தர்களும், மஞ்சங்களும், விதானமமைந்த வேதிகைகளும் அத்தண்கதிரால் விளக்கமுறுவனவாயின. கடல்சூழ்ந்த இவ்வுலகிற்கு இடைநின்று விளங்கும் மேருப்போல, அவ் வஞ்சிமாநகரின் நடுவுநின்றோங்கும் பொன்மயமான அரண்மனையிலுள்ள நிலாமுற்றமாகிய மணியரங்கில் அப்பூர்ணசந்திரனது காட்சியைக் காணவேண்டி, மகளிர் தம் வளைக்கைகளில் விளக்குகளை ஏந்திப் பல்லாண்டு பாடிக்கொண்டு ஒருபுடை வரவும், மத்தளம் வீணைகளுடன் பண்கனிந்த பாடலிசைகள் ஒருசார் பரவவும், கூனருங் குறளருங் கஸ்தூரி வெண்கலவைச் சாந்தங்களை ஏந்தினவராய் ஒருபுடை செல்லவும்,* பெண்கோலம்பூண்ட பேடியர் வண்ணஞ்சுண்ணம் மாலையிவற்றைத் தாங்கிவரவும், பூவும் நறும்புகைகளும் வாசனைப்பண்டங்களும் பரவவும், கண்ணாடி தூமடி அணிகலன்களைக் கொண்டு சேடியர் சூழவும், இவ்வாறாக எழுந்தருளிய

தன் தன்மபத்தினியாகிய இளங்கோவேண்மாளோடுங் கூடி வேந்தர்பெருமானான செங்குட்டுவன் அவ்வரங்கினை அடைந்து அதனில் வீற்றிருப்பானாயினன்.

அப்போது, மறையவர்நிறைந்த பறையூர்வாசியும், கூத்தில் வல்லவனுமாகிய சாக்கையன் ஒருவன் அரசன்முன்வந்து நின்று, சிவபிரான் திரிபுரங்களை எரித்தவிடத்தே உமையவளை ஒரு பாகத்துக்கொண்டு ஆடிய கொட்டிச்சேதம்* என்னுங் கூத்தினை அப்பெருமான் ஆடியமுறையே நடித்துக் காட்டக், குடவர்கோமானும் கோப்பெருந்தேவியும் அதனைக் கண்டு மகிழ்ந்தனர். இங்ஙனம், அவ்விருவரது நன்குமதிப்பையும் பெற்றுக் கூத்தச்சாக்கையன் விடைபெற்று நீங்கிய பின், செங்குட்டுவன் மனைவியுடன் அந்நிலாமுற்றத்தைவிட்டுப் புறப்பட்டு அரசிருப்பாகிய பேரோலக்கத்தை அடைந்தான். அடைந்தபின்னர், நீலன் முதலாய கஞ்சுகமாக்கள் மறையோனான மாடலனுடன் அவ்விடம்வந்து, வாயில்காவலரால் தம்வரவை மன்னனுக்கறிவித்து, அவனாணைபெற்று உட்சென்று அரசனை வணங்கிச் சொல்லுகின்றார்:—"வெற்றி வேந்தே! தேவரீர் எங்களுக்கிட்ட கட்டளைப்படியே, சோழரது பழமைதங்கிய நகரஞ்சென்று, அங்கே, வச்சிரம் அவந்தி மகதநாட்டரசரால் அளிக்கப்பெற்ற பந்தருந் தோரணவாயிலுங் கொண்ட சித்திரமண்டபத்தில் வீற்றிருந்த செம்பியர் பெருமானைக்கண்டு, வடநாட்டுப் போரில் அகப்பட்ட ஆரிய மன்னரை அவ்வேந்தனுக்குக் காட்டி அவனடி வணங்கி

* இது, கொடுகொட்டி, கொட்டி எனவும் வழங்கும்; 'திரிபுரந் தீமடுத்தெரியக்கண்டு இரங்காது கைகொட்டி நின்றுடுதலிற் கொடுமையுடைத்தாதல்நோக்கிக் கொடுகொட்டி என்று பெயர் கூறினார்' என்பர் அடியார்க்குநல்லார். (சிலப். 6. 43).

நின்றேம். அஃதறிந்த அவ்வரசன் 'போர்க்களத்தே பேராண்மைகாட்டிப்பொருது தங்கள் வாளையும் குடையையும் அக்களத்திட்டு உயிர்தப்பியோடிய வேந்தரைப் போரிற்பிடித்துக் கொண்டுவருதல் ஒரு வெற்றியாகாது' என்று தன் சேனுபதியை நோக்கிக் கூறினன். பின்னர் அரசே! அவன் தலைநகரைவிட்டுநீங்கி மதுரைசென்று பாண்டியனைக் கண்டேம். 'அமர்க்களத்தே தங்கள் குடைக்காம்பை நட்டுவைத்தலைவர் போலக் கையிலே பிடித்துக்கொண்டு, இமயப்பக்கத்துள்ள குயிலாலுவம் என்னும் போர்க்களத்தைத் துறந்து புறங்கொடுத்து, ஆங்குள்ள சிவபிரானை வணங்கியவராய்த் தவக்கோலங் கொண்டோடின ஆரியமன்னர்கள்மேல் இவ்வாறு மிகுந்த சீற்றங்கொண்ட அரசனது வெற்றி, இதுவரையில்லாத புதுமையாகும்' என்றான் அப்பாண்டியன்" எனச் சேரர்பிரானுக்குத் தூதர்தலைவனான நீலன் அவ்வேந்தர்கூறிய வார்த்தைகளைச் செப்பிநின்றனன. இவற்றைச் செவியுற்றுக்கேட்ட செங்குட்டுவன், தன் வெற்றியை அவ் வரசர்கள் இகழ்ந்ததனுற் கோபம்பெருகித் தாமரைபோன்றகண்கள் தழனிறங் கொள்ள நகைசெய்தனன். இங்ஙனம் அரசனுக்குச் சோழ பாண்டியர்மேற் சிற்றம்பெருகுதலை மறையவணுகிய மாடலன் கண்டு அச்சபையிலெழுந்துநின்று 'வேந்தர்வேந்தே! நின் வெற்றி விளங்குவதாக' என்றேத்திப் பின்வருமாறு கூறுகின்றான். "மிளகுக்கொடிமிக்க மலைப்பக்கத்துறங்கும் யானைக் கூட்டங்களையுடைய பகைவரது வியலூரையழித்தும், ஆத்திமாலையுடையவரும் சோழர்குடியினருமாகிய ஒன்பதின்மருங் கூடிவிளைத்த பெரும்போரை நேரிவாயில் என்ற ஊரில் வென்றும், பெரிய தேர்ச்சேனைகளுடன் இடும்பாதவனத்துத்தங்கி ஆங்குவிளைந்த போரைக்கடந்தும், நெடுங்கடலில் மரக்கலங்

களைச் செலுத்தியும், முன்னொருகாலத்தில் எதிர்த்துவந்த ஆரியமன்னரைக் கங்கைக்கரையிற் செயித்தும் இங்ஙனம் வெற்றிமாலைசூடி, உயர்ந்தோர் பலருடன் அறியவேண்டுவன வற்றை அறிந்த அரசரேறே! நீ வாழ்க; நின் கோபம் அடங்குவதாக; நின் வாழ்நாட்கள் ஆன்பொருநையாற்று மணலினும் அதிகமாக விளங்குக; யான் கூறுஞ் சொற்களை இகழாது கேட்டருள்வாய்; உலகங்காத்தலை மேற்கொண்டுவிளங்கும் உனது சிறந்த ஆயுட்காலத்தே ஐம்பதியாண்டுகள்வரை கழிந்தும் நீ அறக்களவேள்வியைச் செய்யாது எப்போதும் மறக்களவேள்வியே செய்துவருகின்றாய்; இராசகாரியங்களையெல்லாம் முற்றச்செய்து கொற்றவாளை வலத்தேந்திநிற்கும் உன்னுடைய தலைநகரத்தில், முன்னிருந்த புகழ்மிக்க உன் முன்னோரிலே,

*"கடற்கடம் பெறிந்த காவல ரியினும் 1
விடர்ச்சிலை பொறித்த விறலோ னியினும் 2
நான்மறை யாளன் செய்யுட் கொண்டு
மேனிலை யுலகம் விடுத்தோ னியினும் 3
போற்றி மன்னுயிர் முறையிற் கொள்கெனக்
கூற்றுவரை நிறுத்த கொற்றவ னியினும் 4
வன்சொல் யவனர் வளநா டாண்டு
பொன்படு நெடுவரை புகுந்தோ னியினும் 5
இகற்பெருந் தானையொ டிருஞ்செரு வோட்டி
அகப்பா வெறிந்த அருந்திற லாயினும் 6

* இவ் வடிகளிற் கூறப்பட்ட செங்குட்டுவன்முன்னோர் செயல்களைப் பதிற்றுப்பத்துப்பாடல்களினும் பதிகங்களிலும் கண்ட சேரர் செய்திகளோடு ஒப்பிடும்போது, பல (3, 6. 7) ஒருவர் செய்கைகளாகவும், சில(8)செங்குட்டுவனுக்குப்பிற்பட்ட சேரர்செயலாகவும், முறை பிறழ்ந்தும் காணப்படுகின்றன. இதனால், செங்குட்டுவனுக்கு முன்னோர்களை, இவ் வடிகளைக்கொண்டு முறைப்படுத்தல் அருமையாகும்.

> உருகெழு மரபி னயிரை மண்ணி
> இருகட னீரு மாடினே ருயினும் 7
> சதுக்கப் பூதரை வஞ்சியுட் டந்து
> மதுக்கொள் வேள்வி வேட்டோ ருயினும்" 8

இன்றுவரை ஒருவரும் நிலைத்தவராகக் காணப்படாமை யின் இவ்யாக்கை நிலையற்றதென்பதை நீயே யுணர்வாய்; விரிந்தவுலகத்திற் பெருவாழ்வுடையராகிய செல்வரிடத்தே அச் செல்வந்தானும் நிலையாதென்பதைத் தமிழரசரையிகழ்ந்த இவ்வாரியமன்னரிடத்தில் நீயே கண்டனையன்றோ? இனி இளமைநிலையாதென்பதை அறிஞர் உனக்கு உரைக்கவேண்டு வதேயில்லை; என்னெனின், திருவுடை மன்னனாகிய நீயும் உனது நரைமுதிர்ந்த யாக்கையைக் காண்கின்றாய்; தேவ யோனியிற் பிறந்த ஒரு நல்லுயிர் அதனிற்றாழ்ந்த மக்கட் பிறவிக்குத் திரும்பவுங் கூடும். மக்கள்யாக்கையிற் பொருந் திய ஆன்மா அவ்வாறே விலங்குடலையெடுத்தலும், அவ் விலங்குடலையெடுத்தது துக்கமிகுந்த நரககதியையடைதலும் உண்டாம். ஆதலால், இவ்வுயிர்கள் ஆடுகின்ற கூத்தரைப் போல ஓரிடத்தே ஒரு கோலங்கொண்டு நிலைத்தல் ஒருபொழுதுமில்லை. தான் செய்கின்ற கருமவிதிக்கேற்ப உயிர்கள் அவ்வக்கதியை அடையுமென்பது குற்றமற்ற அறிஞரது மெய்யுரையாகும்; ஆதலால், இவற்றை நன்குணர்ந்து, எழுமுடியாரந் தாங்கிய வேந்தே! வழிவழியாக நின்னுளை வாழ்வதாக; யான் இவற்றைப் பிறர்போலப் பொருட்பரிசில் காரணமாக ஊன்பாற் சொல்லவந்தவனல்லேன். மற்று, நல்வினைப் பயனால் உத்தமசரீரம்பெற்ற ஒரு நல்லுயிர், செய்யவேண்டிய கருமங்களைச் செய்தலின்றி, இவ்வுலகத்துப் பிறந்திறப்

போரெல்லாரும் போம்வழியிலேபோய் வீணேகழிதலை யான் பொறுக்கக்கூடாதவனாக இவைகூறினேன். ஆதலின், அறிவு முதிர்ந்த அரசே! மோக்ஷமார்க்கத்தை அளிக்கும் யாகவேதியர்கள் காட்டுகின்ற வேதவழிப்படியே அரசர்க்கெடுக்கப் பட்ட பெரியயாகங்களை நீ செய்தல் தகும். அவ்வறங்களை நாளைச்செய்வோம் என்று தாழ்ப்போமாயின், கேள்வியளவேயான இவ்வான்மா நீங்கிவிடின் என் செய்வது? தம் வாணாளை இவ்வளவென்று வரையறுத்துணர்ந்தோர் கடல் சூழ்ந்த இப்பேருலகில் ஓரிடத்தினும் இலர். ஆதலால், யாக பத்தினியாகிய இவ்வேண்மாளுடன் கூடி, அரசரெல்லாம் நின்னடி போற்ற அவ்வேள்வியை உடனே தொடங்கி ஊழியளவாக உலகங்காவல்புரிந்து, நெடுந்தகாய்! நீ வாழ்வாயாக" என்று அம்மறையவன் உபதேசித்தனன்.

இவ்வாறு, மாடலன், செங்குட்டுவனது செவியே வயலாக வேதம்வல்ல தன்நாவைக்கொண்டுழுது உத்தம தர்மங்களாகிய வித்துக்களை விதைத்தமையின், அவ்விதைகள் அப்போதே விளைந்து பக்குவம்பெற்ற உணவாய்ப் பெருகவும், அவற்றை விரைந்துண்ணும்வேட்கை அவ்வரசனுக்கு உண்டாகியது. அதனால், சேரர்பெருமான், வேதவழிப்பட்ட தர்மங்களை நன்கறிந்த சிரௌதியராகிய வேள்வியாசிரியர்களுக்கு, மாடலமறையோன் கூறிய முறையே, யாகசாந்திக்குரிய விழாவைத் தொடங்கும்படி ஆஞ்ஞாபித்தனன். பின்னர்த் தன்னாற் சிறைப்படுத்தப்பட்ட ஆரியமன்னராகிய கனகவிசயரைச் சிறையினின்று மீட்பித்து, பொய்கை சூழ்ந்ததும் குளிர்ச்சிதங்கிய மலர்ச்சோலைகளுடையதுமாகிய வேளாவிக்கோமந்திரம் என்னுமாளிகையில் அவர்களை வசிக்

கும்படி செய்வித்துத் தான் நிகழ்த்தும் யாகமுடிந்ததும் அவரை அவரது நாட்டுக்கனுப்புவதாக அறிவித்து, அது வரை அவ்வாரியவரசர்க்கு வேண்டிய உபசாரங்களைச் செய்துவருமாறு வில்லவன்கோதை என்னும் சேனாபதிக்கு மகிழ்ச்சியுடன் கட்டளையிட்டான். அவ்வாறே, அழும்பில்வேள் என்னும் அமைச்சனோடு ஆயக்கணக்கர்களையேவி, நீர்வளமிக்க நகரங்களிலும் மற்றையூர்களிலும் சிறைப்பட்டவரையெல்லாம் வெளியேற்றிச் சிறைச்சாலைகளைத் தூய்மைசெய்யவும் ஆணையிட்டனன்.

இவ்வாறு, சேரர்பெருமான் ஆணையிட்டபின், உலகமுற்றுந் தொழுகின்ற பத்தினியாகத் தான் (கண்ணகி) விளங்குதலால், 'அருந்திற லரசர் முறைசெயி னல்லது - பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாது' என முன்னோருரைத்த மொழியினுண்மையை ஆத்திமாலைசூடிய சோழனைக் கொண்டு விளக்கியும், செங்கோல் வளையுமாயின் அரசர் உயிர்வாழார் என்ற உண்மையைத் தென்னாடாளும் பாண்டியனைக்கொண்டு விளக்கியும், தாஞ்செய்த சபதம் நிறைவேறினாலல்லது தம் கொடுஞ்சினந் தணியார் அரசரென்பதை ஆரியவரசர் அறியும்படி சேரன்-செங்குட்டுவனைக்கொண்டு விளக்கியும், மதுரைமாநகரம் கேடடையும்படி கொடிய அழலைக் கொங்கையினின்று விளைவித்தும் (இங்ஙனம் அருஞ்செயல்களைப் புரிந்து) சோநாட்டை யடைந்து வேங்கைமர நீழலில் தங்கிய நங்கையின்பொருட்டு, அந்தணர் புரோகிதன் நிமித்திகன் சிற்பாசாரிகள் இவர்கள்சென்று அழகுபெற அமைத்த பத்தினிக்கோயிலிலுள்ளதும், இமயத்தினின்று கொணர்ந்த சிலையில் கைத்தொழிற்றிறமையால் முற்றுவிக்

கப்பெற்றதுமான பத்தினிக்கடவுளின் பிரதிமைக்கு அணிகலன்களெல்லாம் பூட்டியலங்கரித்துப் புஷ்பாஞ்சலி செய்து, திக்தேவதைகளையும் கடைவாயிலிலே தாபித்து, யாகவேள்வியோமங்களும் உற்சவங்களும் நிகழுமாறு கடவுண்மங்கலமாகிய பிரதிஷ்டைநிகழ்த்தச் செல்லுக" என்று சாத்திரம் வல்ல மக்களைநோக்கி, வடதிசைவணக்கிய சேரன்-செங்குட்டுவன் கற்பனைசெய்தனன்.

---

## 6-வது வாழ்த்துக்காதை.

*கண்ணகியின் உற்றார் அவள்கோயிற்கு வருதலும் அவருடன் செங்குட்டுவன் பத்தினியை வாழ்த்தியதும்.*



மேலே கூறியவாறு, குமரிமுதல் இமயம்வரை தன் ஆணைநடத்தி உலகாண்ட சேரலாதனுக்குச் சூரியவமிசத்துச் சோழன்மகள் பெற்ற மைந்தனும், முன்னொருகாற் கொங்கருடன் போர்புரியவிரும்பிக் கங்கையாற்றுக்கரைவரை படையெடுத்துச் சென்றவனுமாகிய சேரன்-செங்குட்டுவன் ஆரியரிடத்தேகொண்ட சினத்தோடுந்திரும்பித் தன் தலைநகரான வஞ்சியுள்வந்து தங்கியிருந்தகாலத்தே, வடநாட்டு ஆரியவரசர்பலர் அப்பக்கத்துநடந்த சுயம்வரமொன்றன்பொருட்டுக் கூடியிருந்தவிடத்தில், 'தமிழ்நாடாளும் வேந்தர் போர் விரும்பிப் படையெடுத்துவந்து இங்குள்ள ஆரியவரசர்களை வென்று இமயவரைமேல் தங்கள் இலச்சினைகளாகிய வில் புலி மீன்களைப் பொறித்துச்சென்ற காலங்களில் எங்களைப் போலும் பெருவேந்தர்கள் இந்நாட்டில் இருந்திலர்போலும்' என்று தம்மில் ஒத்துப்பேசித் தமிழரசரையிகழ்ந்து நகை

யாடியசெய்தியை ஆங்கிருந்துவந்த மாதவர்சிலர் சொல்லக் கேட்டு, இயற்கையிலுருள்கின்ற உருளையொன்றைக் குணிலைக்கொண்டு உருட்டினாற்போலப் பத்தினியின்பொருட்டுக் கற்கொணர வேண்டுமென்றெண்ணியிருந்த அவ்வரசனுள்ளத்தை அம்மாதவர்வார்த்தை கிளரச்செய்தமையால் உடனே தன் படைகளைத் திரட்டிச்சென்று ஆரியநாட்டரசரைப் போரில் வென்று அவர்முடித்தலையிற் பத்தினியின் படிமத்துக்குரிய இமயக்கல்லைச் சுமத்திக்கொண்டு அங்கிருந்து திரும்பி வெற்றிமகிழ்ச்சியுடன் கங்கையாற்றிற் றங்கி அப்படிமத்தைக் கங்கையாட்டித்தூய்மைசெய்து தன் சினநீங்கி வஞ்சிமாநகரமடைந்து வேந்தர்பலருந் தொழத்தக்க படிமஞ் செய்வித்துப் பத்தினிக்கடவுளைப் பிரதிஷ்டை செய்ததோடு, அக்கோயிலில் அரசரெல்லாம் தத்தம் திறைகளைக்கொண்டு வந்து வணங்கும்படியும் செய்வித்தனன்.

இஃது இங்ஙனமாக, மதுரைமாநகரில் முன்னைவினையாற் கோவலன் பொற்கொல்லனாற் கொலையுண்ண அது கேட்ட அவன்மனைவி கண்ணகி துன்பமிக்குக் கண்ணீர் பெருக்கிப் புழுதியிற்புரண்டு கூந்தலைவிரித்துத் தருமதேவதையைப் பழித்துக்கொண்டு பாண்டியன்முன் சென்று வழக்காட, அவளது துக்கத்தைக்கண்டு பொறாத அவ்வரசன் தன் செங்கோல் வளைந்தமையால் உயிர்நீத்ததையும், கோவலன் கொலையுண்டதுகேட்டு அவன் தந்தை துறவுபூண்டதையும், தாய் இறந்தமையையும், மாடலனென்னும் அந்தணன்மூலங் கேள்வியுற்று மிகவும் துக்கித்துக் கண்ணகியின் செவிலித் தாயும், அடித்தோழியும்,* சாத்தன் கோயிலில் வாழும் தே

* முக்கியத்தோழி.

வந்தியென்னும் பார்ப்பனத்தோழியும் ஆகிய மூவருஞ் சேர்ந்து கண்ணகியைக்காணவேண்டி மதுரைக்குவரவும், அப்பத்தினியின் சீற்றத்தால் அந்நகரம் வெந்தசெய்தியை யறிந்து, கண்ணகியை அடைக்கலமாகப்பெற்று அவளது துன்பம் பொறுமனுயிர்விட்ட மாதரியின்மகள் ஐயை என்னும் இடைக்குலமகளையடைந்து அவளுடன்சேர்ந்து மதுரைநீங்கி வையைக்கரைவழியே சென்று திருச்செங்குன்று என்னும் மலைமீதேறி, ஆங்குப் பிரதிஷ்டிக்கப்பெற்ற கண்ணகி கோட்டத்தையடைந்து அப் பிரதிஷ்டையைச்செய்து சிறப்பித்து நின்ற சேரன்-செங்குட்டுவனை ஆங்குக்கண்டு அவனுக்குத் தங்கள் வரலாறுகளையெல்லாம் முறையே உரைத்தனர். உரைத்தபின், அவர்களுள் தேவந்தி என்னும் பார்ப்பனத் தோழியும் செவிலியும் அடித்தோழியும்—கண்ணகியின் துயர்பொறாது அவள்தாயும் தம்மாமியும் உயிர்நீத்ததும், மாமனாகிய மாசாத்துவானும், தந்தை மாநாய்கனும், கோவலன்காதற்கணிகை மாதவியும், அவள்மகள் மணிமேகலையும் துறவுபூண்டதுமாகிய செய்திகளை அப்பத்தினிக்கடவுள் முன் சொல்லிப், பின் தம்முடன்வந்த ஐயையை அக்கடவுட்குக் காட்டி 'நின்னை அடைக்கலமாகப் பெற்று அவ்வடைக்கலப்பொருளைக் காத்தோம்பமுடியாமல் உயிர்துறந்த மாதரி என்னும் இடைக்குல முதியாளின் மகளையும் பார்' என்று கூறி அழுதரற்றிநின்றார்கள். இங்ஙனம் இவர்கள் அரற்றுகின்றபோது, பொற்சிலம்பும் மேகலாபரணமும் வளைக்கைகளும் வயிரத்தோடணிந்த காதுகளும் மற்றும்பல அணிகளும் அணிந்துகொண்டு மின்னற்கொடிபோன்ற உருவமொன்று மீவிசும்பிற் றோன்றியது. அதனைக்கண்ட செங்குட்டு

வன் பெரிதும் அதிசயமடைந்தான். அப்போது அவ்வரச னுக்குக் கண்ணகி, தன் கடவுணல்லணி காட்டியதோடு, தன் னைக் காணவந்த மகளிரைநோக்கித் 'தோழிகாள்! தென்னவ னாகிய பாண்டியன் சிறிதுங் குற்றமுடையவனல்லன். அவன் தேவேந்திரன் சபையில் நல்விருந்தாய் விளங்குகின்றான். நான் அவ்வரசன் மகள் என்றறியுங்கள். முருகன் வரைப் பாகிய இம்மலையில் விளையாடல்புரிய எனக்குப் பெருவிருப்ப மாதலால் இவ்விடத்தைவிட்டு யான் நீங்கேன். என்னோடு என் தோழிகளாகிய நீவிரும் சேர்ந்து விளையாடவருதிர்' என்று தன் பழமைகொண்டாடி அப்பத்தினி கூறினள். இங் ஙனம் பத்தினித்தெய்வம் நேர்நின்றுகூற அவற்றைக் கேட் டிருந்தவராகிய வஞ்சிமகளிரும் செங்குட்டுவன் ஆயமகளி ரும் வியப்புற்றுத் தங்களிற்கூடி, அத் தெய்வத்தையும் அத் தெய்வஞ் சஞ்சரித்த தமிழ்நாடாளும் அரசர் மூவரையும் அம்மானை கந்துகம் ஊசல்வரிகளாலும் உலக்கைப்பாட்டா லும் பலவாறு வாழ்த்திக்கொண்டு பாடினர். முடிவில் 'சே ரன்-செங்குட்டுவன் நீடூழிவாழ்க' என்று அத் தெய்வவுருவ மும் அரசனை வாழ்த்தி மறைந்தது.

---

## 7-வது வரந்தருகாதை.

*பத்தினி, செங்குட்டுவனையும் பிறரையும் அநுக்கிரகித்தது.*

வடதிசையை வென்றுவணக்கிய சேரலர்பெருமானான செங்குட்டுவன், பத்தினிக்கடவுளது தெய்வவுருவை மேற் கூறியவாறு தரிசித்தபின்னர், தேவந்தியென்னும் பார்ப்பனி யைநோக்கிச் 'சிறிதுமுன்னர் நீங்கள் அழுதரற்றிக்கொண்டு பத்தினிமுன்பு கூறிய மணிமேகலையென்பவள் யார்? அவள்

துறவு பூண்டதற்குக் காரணம் யாது? சொல்லுக' என்று கேட்டனன். தேவந்தியும், கணிகையர்குலத்து ளுயர்ந்தவ ளான மணிமேகலையின் துறவைக் கூறத்தொடங்கி—"அரசே! நின்வெற்றி பெருகுக: நின்னாடு வளஞ்சிறப்பதாக; கோவலனுக்கு மாதவியிற்றுதித்த மணிமேகலையானவள் கன்னிப்பருவமடைந்ததற்கேற்ற அறிகுறிகளெல்லாம் நிரம்பின ளாயினும், காமக்குறிப்புச் சிறிதேனும் இல்லாதவளாயினள். அதனால், நட்டுவனார் கூத்துமுதலியன பயில்வியாமையின் குலத்தலைவர்களாகிய செல்வர்கள் அவளைக் கொள்ளுதற்கு நினைந்திலர். இங்ஙனமாதலறிந்து மணிமேகலையின் பாட்டி சித்திராபதி, தன்மகள் மாதவிக்கு அவள்நிலைமைகூறி மன வருத்தமடையத் தாயின்கருத்தறிந்த அம்மாதவி, மணிமே கலையை உடனழைத்துக்கொண்டு அவளைக் கணிகையர்குலத் திற் புகவிடாது, மன்மதன் தானினைத்திருந்த எண்ணம் பழு தாகித் தன்கரும்புவில்லையும் மலர்வாளிகளையும் வெறுநிலத் தெறியும்படி, மணிமேகலையின் கூந்தலை மாலையுடன் களை வித்து இந்திரவிகாரமடைந்து பௌத்ததருமத்தே சேர்த் தனள். இச்செய்திகேட்ட அரசனும் நகரத்தாரும், கிடைத் தற்கரிய நன்மணியைக் கடலில் வீழ்த்தவர்போலப் பெருந் துன்பமடைந்தனர். மணிமேகலை தன் வைராக்கியத்தைச் சங்கத்தாரான அறவணவடிகளிடம் சென்றுகூறிப் பிக்ஷுணி யாயமர்ந்த செய்தியை, அவ்வடிகளே அன்போடும் எமக்குக் கூறினர். இவ்வாறு, இளம்பருவத்தே மணிமேகலை தன் அழகிய கோலத்தை அழித்துத் துறவுபூண்டனளாதலின், நான் கதறியழலாயினேன்" என்று முன்னடந்த வாலாறு களைத் தேவந்தி கூறிமுடித்தாள்.

பின்னர்ச் சாத்தனென்னுந் தெய்வம் திடுக்கென்றேறி யதனால் ஆவேசங்கொண்டு, அத்தேவந்தி, கூந்தல்குலைந்து விழவும், புருவந்துடிக்கவும், செவ்வாய்மடித்துச் சிரிப்புத் தோன்றவும், மொழிதடுமாறி முகம்வியர்க்கவும், செங்கண் சிவக்கவும், கைகளையோச்சிக் கால்பெயர்த்தெழுந்து, பலரு மின்னதென்று தெரியவாராத அறிவுமயக்கமுடையவளாய் நாவுலர்ந்து தெய்வம்பேசும் பேச்சுக்களைக் கூறிக்கொண்டு, செங்குட்டுவன் திருமுன்பிருந்த மாடலனைநோக்கி "மாடல! யான் பாசண்டச் சாத்தன். இப்போது இத் தேவந்தியின் மேல் ஆவேசித்துள்ளேன். பத்தினிக்கடவுளின் பிரதிஷ்டை யைத் தரிசிக்கவேண்டி இங்குவந்துள்ள மகளிருள்ளே அரட் டன்செட்டியின் இரட்டைப்பெண்களும் ஆடகமாடத்துத் திருமால் கைங்கரியம்புரியும் * சேடக்குடும்பியின் இளம் பெண்ணும் ஈங்கிருக்கின்றனர். மங்கலாதேவியின் கோயிற் பக்கத்துள்ள மலையிடத்தே, மயிற்கல்லின் பிடர்த்தலையினின் றிழிகின்ற நீரால் நிரம்பும் பொய்கைகள் பலவற்றுள்ளே இடையிலிருப்பதும், சிறியஅழகிய கற்களோடு மாவைக் கரைத்தாலொத்துவிழும் நீருடையதுமாகிய சுனையொன்றிற் புகுந்து நீராடுவோர் பண்டைப்பிறப்பின்செய்திகளை அறிந் தோராவர் என்பதுபற்றி, அம்மங்கலாதேவிகோயிலின் வா யிலிலே நீ இருந்தபோது, அந்நீருள்ள கரகத்தை 'இது நீ கொள்ளத்தக்க'தென்று நான் உன்பாற் கொடுத்தேனன்றோ.

---

* சேடக்குடும்பி என்பதற்குத் திருவடிபிடிப்பான் என்றுகூறு வர், அரும்பதவுரையாசிரியர் (பக்-75). திருவடிபிடிப்பான் - அருச்சக னென்பது 'நவிற்கோயிற் றிருவடிபிடிக்கும் ஸ்ரீதரபட்டனும்' என் னும் சாஸனப்பகுதியால் தெரிகின்றது. (South Indian Inscriptions, Vol. III. p. 84.)

அங்நீர்க்கரகமும் இப்போது உன் கையின்கண்ணே உள்ளது. சந்திராதித்தர் உள்ளவளவும் அங்நீரின் கடவுட்டன்மை ஒழியாது. இக்கரகத்துநீரைச் செங்குட்டுவன் முன்னேயுள்ள இவ்விளம்பெண்கள் மூவர்மீதும் தெளிப்பாயாயின், இன்னோர் முற்பிறப்பினை அறிந்தோர் ஆவர்; இதனுண்மையை நீயே சோதித்துப் பார்." என்று கூறினாள்.

இங்ஙனம் தேவந்தி ஆவேசமுற்றுக்கூறிய வார்த்தைகளைக் கேட்டலும், செங்குட்டுவன் மிகவும் விம்மிதமுற்றுப் பக்கத்திருந்த மாடலன்முகத்தை நோக்கினான். அப்போது அவ்வந்தணன் மகிழ்ச்சியுற்றவனாகிச் செங்குட்டுவனை வாழ்த்தி—'அரசே! இது கேட்பாயாக; மாலதியென்னும் பார்ப்பனமாது தன்மாற்றாள்குழந்தையை எடுத்துப் பால் கொடுக்கப் பழவினைவயத்தால் அப்பால்விக்கிக் குழந்தை கையிலேயிறக்கவும், அதன்பொருட்டு ஆற்றாளாய்ப் பெருந் துன்பமடைந்து, பாசண்டச்சாத்தன் கோயில்சென்று அத் தெய்வத்தின்பால் வரங்கிடந்தாள். அவளது பெருந்துயர்க்கிரங்கி அச்சாத்தன் குழந்தையுருக்கொண்டு வந்து 'அன்னாய்! யான் வந்தேன்; இனி உன் துயரொழிக' என்று கூறவும், அம்மாலதியும் மாற்றாந்தாயும் அதனைவளர்க்கக் காப்பியம் என்னும்பழங்குடி பொலிவுடைய வளர்ந்து, பக்குவம் வந்ததும் அப்பிள்ளை இத்தேவந்தியை மணந்து இவளோடும் எட்டியாண்டு இல்லறம் நடத்திவந்தான்.* இவ்வாறு நிகழுங்கால், ஒருநாள், தன் மனைவியாகிய இவட்கு அச்சாத்தன் தன் தெய்வவுருவை வெளிப்படுத்திக்காட்டித் தன் கோட்டத்

---

* இங்ஙனமே, கண்ணகியின் பார்ப்பனத்தோழியான தேவந்தியின் வரலாற்றை, இளங்கோவடிகள் கனாத்திறமுரைத்த காதையினும் விரித்துக் கூறுவர்.

திற்குவரும்படி இவளுக்குக் கட்டளையிட்டு மறைந்தனன். மறைந்தவன், நான் மங்கலாதேவியின் கோட்டத்திலிருக்கும் போது, அந்தணனுருக்கொண்டு வந்துதோன்றி, உறியிலமைந்த இக்கரகத்தை என்கைக்கொடுத்து நிகழ்வதுகூறி, இதனைச் சேமமாக வைத்திருக்கும்படி எனக்குக் கூறிச்சென்றான். அங்ஙனஞ் சென்றதுமுதல் இதுவரை அவன் திரும்ப என்பால் வந்திலன்; அதனால் இக்கரகத்தைத் தவறவிடாது என்னுடன் கொண்டுவந்தேன். இவ்வாறாதலால், அச்சாத்தனென்னுந் தெய்வமே தன் பார்ப்பனியாகிய இத்தேவந்தியின்மேல் இப்போது ஆவேசித்து இக்கமண்டலநீரைத் தெளிக்கும்படி கூறினான். வேந்தர்வேந்தே! இங்குள்ள இச்சிறுமியர்மேல் இதனீரைத் தெளித்துச் சாத்தன்கூறிய அவ்வுண்மைகளை நாம் இனியறிவோம்" என்று அம் மாடலமறையோன் நிகழ்ந்த வரலாறுகளைக்கூறித் தான் கொணர்ந்த கமண்டலத்து நீரை, அங்கிருந்த பெண்கள் மூவர்மேலும் புரோக்ஷித்தனன். உடனே, அச்சிறுமிகட்குத் தங்கள் பழம் பிறப்புணர்ச்சி வந்தடையவும், அம்மூவருந் தனித்தனியாக அடியில்வருமாறு புலம்பலானார்கள்:—

(முதலாமவள்) "யான்பெற்ற மகளே! யாவரும் புகழத்தக்க உன்கணவன் கூடாவொழுக்கத்தனாய் உன்னை இகழ்ந்துநின்ற நிலைமைக்கு வருந்திநின்ற உன்தாயாகிய யானும் அறியாமலே அந்நியநாடுசென்று, உற்றாரொருவரும் இல்லாதவிடத்தில் தன்னந்தனியையாய்க் கணவனுடன் கடுந்துயரடைந்தனையே" (என்றாற்றினள்).

(இரண்டாமவள்) "என்னுடன் கூடவேயிருந்துவந்த உன்மனைவியும் என்மருகியுமாகிய கண்ணகியை அழைத்துக்

கொண்டு, நடுநிசியில் பெருந்துயரத்தோடு சென்றனையே; இதனை நினைக்குந்தோறும் என்னெஞ்சம் வருத்தமிக்குப் புலம்புகின்றது; இத்துயரம் என்னாற் பொறுக்கக்கூடவில்லை; என் அருமை மகனே! என்பால் ஒருகால் வாராயோ" (என்று கதறினள்).

(மூன்றுமவள்) "இளையோனே! நீ என்மனையிற் றங்கியிருந்த காலத்தே வையையாற்றில் நீராடச்சென்றிருந்த நான் திரும்பிவந்தபோது ஊரார், ஐயோ! நீ கொலையுண்டதைக் கேட்டேன். கேட்டதற்கேற்ப, மனையில்வந்து நான் பார்த்தபோது நின்னைக் கண்டிலேன். எந்தாய்! என்னையறியாது எங்குச்சென்றனையோ, தெரிந்திலனே!" (என்றழுதாள்).

இவ்வாறாக அச்சிறுமிகள் மூவரும் முதியோர் பேசும் பேச்சால் செங்குட்டுவன் திருமுன்பே அக் கோட்டத்தில் அரற்றியழவும், போந்தைமாலையணிந்த அவ் வேந்தர்பெருமான் வியப்புற்று மாடலன்முகத்தை மறுமுறையும் நோக்க, அரசனது குறிப்பறிந்து அவனையாசீர்வதித்து அம்மறையவன் கூறுவான்:—"அரசே! ஒருகாலத்தில், மதயானை கைக்கொண்டதனால் உயிர்போகும் நிலைமையிலிருந்த அந்தணனொருவனது பெருந்துயர் ஒழியும்படி அவனை அவ்யானையின் கையிலிருந்து தப்புவித்துத் தானே அதன் கையிற் புகுந்து, கொம்புகளின் வழியாக அதன் பிடர்த்தலையிலேறி வித்யாதரன்போல விளங்கித் தன்னருஞ்செயலைக் காட்டிய கோவலனது* அன்புடைமனைவிமேல், இம் மூவரும் பெருங்

* இவனது இவ்வரிய செயலை அடைக்கலக்காதை (42—53)யினும் இளங்கோவடிகள் கூறினர்.

காதல் வைத்தவராதலால், விண்ணுடுசென்ற அவரோடு தா முஞ் செல்லத்தக்க நல்லறத்தை இன்னோர் செய்யாதுபோயி னர். அதனால், இவர்கள் கண்ணகியின்பாற் பேரன்புடைய ராய், அரட்டன்செட்டி மனைவியிற்றில் இரட்டைகளாகச் சேர்ந்து வஞ்சிமூதூரிற் பிறந்தனர்; ஆயர் முதுமகளாகிய மாதரி முற்பிறப்பிற் கண்ணகிமேல்வைத்த காதன்மிகுதியா லும், திருமால்பொருட்டுக் குரவைக்கூத்தாடிய விசேடத் தாலும் சேஷசாயியாகிய அப்பெருமானது திருவடிபிடிப் பான்குலத்திற் சிறுமகளாகத் தோன்றினள். இதனால் நல் லறஞ்செய்தவர் பொன்னுலகடைதலும், ஒன்றிற்காதல்வைத் தோர் பூமியிற் பற்றுள்ளவிடத்தே பிறத்தலும், அறம்பாவங் களின் பயன் உடனே விளைதலும், பிறந்தவர் இறத்தலும், இறந்தவர் பிறத்தலும் புதியனவன்றித் தொன்மைப்பட்டன என்பது நன்குவிளங்கும். இடபாரூடனாகிய சிவபிரான் திரு வருளாலுதித்துப் புகழ்மிகுந்த மன்னவனாக நீ விளங்குத லால், அரசே! முற்பிறவியிற்செய்த தவப்பயன்களையும் பெரி யோர் தரிசனங்களையும் கையகத்துப்பொருள்போற் கண்டு மகிழப்பெற்றாய்; ஊழியூழியாக இவ்வுலகங்காத்து வேந்தே! நீ வாழ்வாயாக" என்று கூறித், தம்முன் அழுது புலம்பிய அவ்விளம்பெண்கள் மூவரும் முற்பிறப்பில் முறையே கண் ணகியின் தாயும், கோவலன் தாயும், ஆய்ச்சியாகிய மாதரியு மாயிருந்த செய்திகளைச் செங்குட்டுவனுக்குத் தெளியமாட லன் விளக்கினான்.

இவற்றைக்கேட்டுப் பெரிதும் வியப்புற்ற சேரர்பெரு மான், பாண்டிநாட்டுத் தலைநகரான கூடன்மாநகரம் எரியுண் ணும்படி தன்முலைமுகத்தைத் திருகியெறிந்த பத்தினியாகிய

கண்ணகியின் கோயிற்படித்தரங்களுக்கு வேண்டிய பூமிகளை யளித்து நித்யோற்சவம் நிகழ்த்தி, ஆராதனை அத்தேவந்தியால் நடந்துவரும்படி நியமித்து, அப் பத்தினிக்கடவுளை மும்முறை பிரதக்ஷிணஞ்செய்து வணங்கிநின்றான். இங்ஙனம் இவனிற்க, கனகவிசயரென்னும் ஆரியவேந்தரும், பண்டே வஞ்சியிற் சிறைப்பட்டுவிடுபட்ட மன்னரும், குடகநாடாளும் கோங்கிளங்கோசரும், மாளுவவேந்தரும், கடல்சூழ்ந்த இலங்காதிபனான கயவாகு வேந்தனும் செங்குட்டுவன் முன்னர் அப் பத்தினியை வணங்கினவர்களாய் "தேவி! எங்கள் நாட்டிற்கும் எழுந்தருளிவந்து, சேரர்பெருமான் செய்த பிரதிஷ்டையிற்போலப் பிரஸன்னையாகி எங்கட்கும் அருள்புரிய வேண்டும்" என்று பிரார்த்தித்தனர். இங்ஙனம் அவர்கள் வேண்டிநின்றபோது, 'தந்தேன், வரம்' என்று ஒரு தெய்வ வாக்கு ஆங்கு யாவருங்கேட்ப எழுந்தது. அது கேட்டுச் செங்குட்டுவனும் ஏனையரசர்களும் சேனைகளும் வியப்புற்று, வீட்டுலகத்தையே நேரிற்கண்டவர்போல ஆரவாரித் தானந்தித்தார்கள். பின்னர், அரசரெல்லாம் தன்னடி வணங்கியேத்த, தத்துவஞானியாகிய மாடலனுடன் சேர்ந்து, அப்பத்தினிக் கோட்டத்து யாகசாலையினுள்ளே சேரன்-செங்குட்டுவன் பிரவேசிப்பானாயினன். இங்ஙனம் அரசன் சென்றபின் யானும்* ஆங்குச் செல்லவெழுந்தேன்; அப் பத்தினிக்கடவுள் தேவந்தியென்னும் பார்ப்பனிமேல் ஆவேசித்தவளாகி என்முன்னர்த் தோன்றி "மூதூராகிய வஞ்சிமாநகரத்தே பேரோலக்க மண்டபத்தில் உந்தையாகிய சேரலாதனோடு நீ சேர்ந்திருந்தகாலையில், நிமித்திகனொருவன் வந்து நின்னைப்

---

* இளங்கோவடிகள் தம் வரலாறுபற்றிக் கூறுங் கூற்று.

பார்த்து, அரசுவீற்றிருத்தற்குரிய இலக்கணம் நினக்கேயுண் டென்று கூற, 'என் தமையனை செங்குட்டுவனிருப்ப நீ முறைமைகெடச் சொன்னாய்' என்று அங்கிமித்திகனை வெகுண்டுநோக்கி, இராச்சியபாரத்தை அகலத்தள்ளிக் குணவாயிற்கோட்டத்தில் துறந்த முனிவனாய் வசித்து, தமையனை செங்குட்டுவனது ஆட்சியுரிமைக்குக் கேடுவாராதபடி மோக்ஷ சாம்ராஜ்யத்தை ஆளநிற்கும் வேந்தனல்லையோ, நீ" என்று, முன்னிகழ்ந்ததும் இனி நிகழ்வதுமாகிய என்னுடைய வரலாறுகளையும் உரைத்தருளினாள். இங்ஙனமுரைத்த இமையோரிளங்கொடியாகிய கண்ணகியின் பெருமைதங்கிய இச் சரிதத்தை விளங்கக்கேட்ட செல்வமிக்க நல்லோர்களே!

"பரிவு மிடுக்கணும் பாங்குற நீங்குமின்
தெய்வந் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை யஞ்சுமின் புறஞ்சொற் போற்றுமின்
ஊனூண் டுறமின் உயிர்க்கொலை நீங்குமின்
தானஞ் செய்ம்மின் தவம்பல தாங்குமின்
செய்ந்நன்றி கொல்லன்மின் தீநட் பிகழ்மின்
பொய்க்கரி போகன்மின் பொருண்மொழி நீங்கன்மின்
அறவோ ரவைக்கள மகலா தணுகுமின்
பிறவோ ரவைக்களம் பிழைத்துப் பெயர்மின்
பிறர்மனை யஞ்சுமின் பிழையுயி ரோம்புமின்
அறமனை காமி னல்லவை கடிமின்
கள்ளுங் களவுங் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினி லொழிமின்
இளமையுஞ் செல்வமும் யாக்கையு நிலையா
உளநாள் வரையாது ஒல்லுவ தொழியாது
செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கென."

மேற்கூறியவாறு, கண்ணகியின்பொருட்டு இமயத்திற் கல்லெடுக்கச்சென்ற செங்குட்டுவன், வடநாடு சென்று தன் பகைவரைப் போரில் வென்று கல்லெடுப்பித்து, அதனைக் கங்கைநீராட்டி இரண்டேமுக்கால் வருஷங்கட்குப்பின் தன்னூர் புகுந்து பத்தினியைப் பிரதிஷ்டைசெய்த வரலாறுகளைச் செங்குட்டுவன் சகோதரராகிய இளங்கோவடிகளே இனிமையும் கம்பீரமுமான தம்வாக்காற் பாடி, அப் பத்தினிக்கடவுள் தம்மை நோக்கிக் கூறிய வாக்கியங்களோடும் நூலைமுடித்திருத்தல் அறியத்தக்கது. இப்பத்தினியின் பிரதிஷ்டாகாலத்தில் வந்திருந்த வேற்றுநாட்டரசர் சிலரும் சோழபாண்டியரும், செங்குட்டுவன் செய்தவாறே, கண்ணகிக்குத் தத்தம் நகரங்களில் கோயிலெடுத்துத் திருவிழா நடத்தியதுமுதலிய செய்திகளை அவ்வடிகள் சிலப்பதிகார முகப்பில் உரைபெறுகட்டுரை என்னும் பகுதியிற் கூறியிருக்கின்றனர் ; அது வருமாறு:—

(1) "அன்றுதொட்டுப் பாண்டியநாடு மழைவறங் கூர்ந்து வறுமையெய்தி வெப்புநோயுங் குருவுந்தொடரக் கொற்கையிலிருந்த வெற்றிவேற்செழியன் நங்கைக்குப் பொற்கொல்லராயிரவரைக் கொன்று களவேள்வியால் விழவொடு சாந்திசெய்ய நாடுமலிய மழைபெய்து நோயுந் துன்பமும் நீங்கியது.

(2) "அதுகேட்டுக் கோங்கிளங்கோசர் தங்கணாட்டகத்து நங்கைக்கு விழவொடு சாந்திசெய்ய மழைதொழிலென்றும் மாறாதாயிற்று.

(3) "அதுகேட்டுக் கடல்சூழிலங்கைக் கயவாகுவென்பான் நங்கைக்கு நாட்பலி பீடிகை கோட்டமுந்துறுத்தாங்கு

அரங்கைதெடுத்து வரந்தருமிவளென ஆடித்திங்களகவையி னுங்கோர் பாடிவிழாக்கோள் பன்முறையெடுப்ப மழைவீற்றி ருந்து வளம்பலபெருகிப் பிழையாவிளையு ளுடாயிற்று.

(4) "அதுகேட்டுச் சோழன்-பெருங்கிள்ளி கோழி யகத்து எத்திறத்தானும் வரந்தருமிவளோர் பத்தினிக்கடவு ளாகுமென நங்கைக்குப் பத்தினிக்கோட்டமுஞ் சமைத்து நித்தல் விழாவணி நிகழ்வித்தோனே"—எனக் காண்க.

---

## 7-ம் அதி:—

## செங்குட்டுவன் சமயநிலை.

---

சேரன்-செங்குட்டுவன் கொண்டொழுகியமதம் பொது வாக வைதிகசமயமேயாயினும், சிறப்பாக இவனைச் சைவாபி மானமுள்ளவன் என்று சொல்லுதல் தகும். இவ்வேந்தன் சிவபெருமான் திருவருளால் உதித்தவனென்றும், அப்பெ ருமானருள்கொண்டு விளங்கியவனென்றும் இவன் சகோ தரரே கூறுவர்.

> "செஞ்சடை வானவன் அருளினில் விளங்க
> வஞ்சித் தோன்றிய வானவ கேளாய்" (சிலப். 26. 98-9.)

> "ஆனே றுயர்த்தோ னருளினில் விளங்க
> மாநிலம் விளக்கிய மன்னவன்" (சிலப். 30. 141-2.)

இவனது சைவாபிமானத்தை அடியில்வரும் மற்றொரு செய்தியும் விளக்குவதாம். வஞ்சியினின்று வடநாட்டியாத் திரைக்குப் புறப்படுங்காலத்தே, இவ் வேந்தன், சிவபிரான்

பாதுகைகளை வணங்கிவாங்கிச் சிரசில் தரித்துக்கொண்டு தன் அரசுவாவின்மேல் ஆரோகணித்தனனென்றும், அப்போது, ஆடகமாடமென்னுங் கோயிலிற் பள்ளிகொண்ட திருமால் பிரசாதத்துடன் சிலர்வந்து இவனை வாழ்த்திநிற்க, தன்முடியிற் சிவபிரான் திருவடிநிலைகளைத் தரித்திருந்தமையின், அத் திருமால் பிரசாதத்தை வாங்கித் தன் மணிப்புயத்தில் தாங்கிக்கொண்டு சென்றனனென்றும் இளங்கோவடிகள் கூறுகின்றார். இவற்றை,

"நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி
உலகுபொதி யுருவத் துயர்ந்தோன் சேவடி
மறஞ்சேர் வஞ்சி மாலையொடு புனைந்து
இறைஞ்சாச் சென்னி யிறைஞ்சி வலங்கொண்டு"
(சிலப். 26: 62—67)

"கடக்களி யானைப் பிடர்த்தலை யேறினன்
குடக்கோக் குட்டுவன் கொற்றங் கொள்கென
ஆடக மாடத் தறிதுயி லமர்ந்தோன்
சேடங் கொண்டு சிலர்நின் றேத்தத்
தெண்ணீர்க் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்
ஆங்கது வாங்கி யணிமணிப் புயத்துத்
தாங்கினனாகி—(சிலப். 26: 60—67)

என்னும் அடிகளால் அறியலாம். இவற்றால், சிவபிரான்பால் இவ் வரசனுக்கிருந்த பத்திமிகுதி விளங்கத்தக்கது. ஆயினும், பிற்காலத்தரசர் சிலர்போல மதாந்தரங்களில் வெறுப்புக்காட்டுதலின்றித் தன்காலத்து வழங்கிய எல்லாச்சமயங்களிலும் அன்புவைத்து ஆதரித்துவந்தவன் செங்குட்டுவனென்றே தெரிகின்றது. இவனாட்சிக் காலத்திலே, வஞ்சி

மூதூரில், வைதிகரும் சைநரும் ஆசீவகரும்* பௌத்தரும் தம்மிற்கலந்து வாழ்ந்துவந்தனர். மணிமேகலை, அந்நகர்க்குச் செல்லநேர்ந்தபோது, சமயவாதியரோடெல்லாம் அவள் அளவளாவினள் என்பதனால் இதனையறியலாம். இஃது என்? செங்குட்டுவனுக்கு உடன்பிறந்தவரான இளங்கோவடிகள் அநுஷ்டித்தமதம் சைநமேயாதல் வேண்டுமென்று, அவரது வாக்கின்போக்கால் தெரிகின்றது. செங்குட்டுவனுக்கும் அவன் சகோதரர்க்கும் மிகுந்த நட்பினரான கூலவாணிகன் சாத்தனார்கொள்கையோ, பௌத்தமதமென்பதில் ஐயமில்லை. இனிச் செங்குட்டுவனால் தெய்வமாக வணங்கப்பெற்ற கண்ணகியுங்கோவலனுங் கொண்டிருந்த மதமும் அப்பௌத்தமேயாமென்பது, மணிமேகலையை நோக்கிக் கண்ணகிக்கடவுள் தன்னிகழ்ச்சிகூறிய வாக்கியங்களால் நன்கறியப்படும்.† இங்ஙனம், பௌத்தச்சார்பினரான கோவலன் கண்ணகிகளின் தந்தையர்கொண்ட சமயங்களோ, முறையே பௌத்தமும் ஆசீவகமும் ஆகும்.‡ இவற்றால், செங்குட்டுவன் காலத்திருந்த தென்னாட்டுச் சமயநிலையை நோக்குமிடத்து, அஃது இக்காலத்துப்போற் பரம்பரையநுஷ்டானத்துக் குட்படாது அவ்வவர் அறிந்துகடைப்பிடித்த கொள்கைமாத்திரையாகவே இருந்ததென்பது விளக்கமாம். தந்தைமதம் மகனுக்கும் தம்பிமதம் தமையனுக்கும் உரியதாக அக்காலத்திருந்ததில்லை. ஆயினும், உறவுமுறையினும் நீதிமுறையினும், தம்முளிருந்த கொள்கைவேறுபாடுபற்றி அவர்கள் ஒருகாலும்

* ஆசீவகம் - சமணசமயத்தின் பாகுபாடுகளுள் ஒன்று; இம்மதத்தினர்க்குத் தெய்வம் மற்கலியென்றும், நூல் நவகதிரென்றும் கூறுவர். (மணிமே 27: 112 அரும்பதவுரை.) † மணிமே. 29: 42—61.

‡ சிலப். 27: 90—100.

பிரிந்திருந்தவரல்லர். அக்காலவியல்பு அங்ஙனமாதலின், சேரன்-செங்குட்டுவன் தன்னைச்சார்ந்த அந்நியமதத்தவரை அபிமானித்ததும் ஆதரித்ததும் வியப்புடையனவல்ல எனலாம். இவ்வாறே, பிற்காலத்துத் தமிழரசரும் மதாந்தரங்களை அபிமானித்திருக்குஞ் செய்தி சாஸனங்களால் அறிந்தது.* இனிச் செங்குட்டுவன் தன் வைதிகச்சார்புக்கேற்ப, பிராமணரைப் பெரிதும் ஆதரித்து, அவர்கள் கூறும் உறுதிமொழிப்படியே ஒழுகிவந்தவனென்பது, மாடலனென்ற மறையவனிடம் அவன் காட்டிப்போந்த கௌரவச் செய்கைகளாக முன்பறிந்தவற்றால் விளக்கமாகும். இவன் தமிழ்வேந்தனுயினும் க்ஷத்திரிய வருணத்தவனுதலால், அவ் வகுப்பினர்க்குரிய யாகாதிகளை அந்தணரைக்கொண்டு செய்துவந்ததும்† பிராமணரையும் அவர் தர்மங்களையும் பெரிதும் போற்றிவந்தமையும்‡ அறியத்தக்கன.

---

* இராஜராஜசோழன் I. முதலியோர் சைவாபிமானமிக்கவர்களாயினும், இவ்வாறே சைநபௌத்த மதங்களை அபிமானித்து வந்தவர்கள் என்பது அவர்கள் சாஸனங்களால் அறியப்படுகின்றது. (கோபிநாதராயரவர்களெழுதிய சோழவமிசசரித்திரம். பக்-17.)

† சிலப். 28: 175—194.

‡ ஷை. 26: 247—250.

8-ம் அதி:—

## செங்குட்டுவன் சமகாலத்தரசர்.

செங்குட்டுவன் காலத்தே, தமிழ்ப்பெருவேந்தர்களாகிய சோழபாண்டியரோடு அவர்கீழடங்கிய சிற்றரசர் பலரும் மிருந்திருந்தனர். தமிழ்ப்பெருவேந்தருள்ளும் பலகிளையி னர் தத்தம் நாட்டின் ஒவ்வொருபகுதிகளைப் பிரித்தாண்டு வந்தனரென்பது முன்னூல்களால் உய்த்தறியப்படுகின்றது. சேரரில் தொண்டியையும் மாந்தையையும் தலைநகராகக்கொ ண்டு ஆட்சிபுரிந்தவர்களை முன்னரே குறிப்பிட்டோம். இவ் வாறே சோழபாண்டியரிலுமிருந்தனரென்பது புறநானூறு முதலியவற்றை நோக்குமிடத்துப் புலப்படக்கூடியதே. ஒரு புலவர் ஒரே வேந்தர்வமிசத்திற் பலரைப்பாடும்படி நேர்ந்த தற்கு இதுவே காரணமாகும். இவ்வாறு கொள்ளாவிடத்து, பலவரசர் ஒரே வமிசத்தில் ஏககாலத்தில் இருந்தவராகக் காணப்பட்டுச் சரித்திரவொற்றுமை பெறுவதில் மயக்கங்கொ ள்ளநேரும். இங்ஙனம் மூவேந்தர் வமிசங்களும் தனித் தனிக் கிளைகளுடையனவாயினும், செங்குட்டுவன்காலத்துச் சோழபாண்டியருள்ளே தலைசிறந்துநின்ற அரசர்சிலரை நாம் முன்னூல்களினின்று குறிப்பிடலாகும். அன்னோர்களை அடி யில் வருமாறு காண்க:—

### [சோழர்.]

செங்குட்டுவன்காலத்திற் சோணாடாண்ட அரசர்கள் பல ராயினும், முக்கியமாக, உறையூர்ச்சோழரும் புகார்ச்சோழரு மென இருபகுதியினராகக் கொள்ளலாம். "மாட மதுரையும்

பீடா ருறந்தையும் - ஒலிபுனற் புகாருங் கலிகெழுவஞ்சியும்"* எனச் சோணுடு தங்காலத்தில் இரண்டு இராஜதானிகளுடையதாயிருந்ததை இளங்கோவடிகளும் குறிப்பிடுவர்.† செங்குட்டுவன் தாயுடன்பிறந்தஅம்மானும் சோழன்மணக்கிள்ளியின் மகனுமாகிய நெடுங்கிள்ளி உறையூரை ஆண்டுவந்தனன்.‡ இவ்வுறையூர்ச் சோழர்க்கும் புகார்ச்சோழர்க்கும் பெரும்பகைமூண்டு போர்நிகழ்ந்து வந்ததாகப் புறநானூற்றால் அறியப்படுகின்றது. புகார்ச்சோழரென்பவர், கரிகாலன்மகனுகக் கருதப்படும் கிள்ளிவளவனும்$ அவன் தம்பியாகிய நலங்கிள்ளியுமாவர். இவருடன் காரியாற்றங்கரையில் நடந்தபோரிலே, செங்குட்டுவனம்மாளுகியநெடுங்கிள்ளி இறந்தான் என்பது, 'காரியாற்றுத் துஞ்சிய' என அவன் விசேடிக்கப்படுதலாலும்¶ அப்போரில் கிள்ளிவளவன் தம்பியே வெற்றிபெற்றவனென்பது, " ஆர்புனை தெரிய ளிங்கோன் றன்னல், காரியாற்றுக் கொண்ட காவல் வெண்குடை, வலிகெழு தடக்கை மாவண் கிள்ளி" எனச் சாத்தனூர் மணிமேகலையிற் கிள்ளிவளவனைக் கூறுதலாலும்§ புலப்படுகின்றன. செங்குட்டுவன் அம்மாளுகிய நெடுங்கிள்ளி இங்ஙனமிறந்ததும், அவன் மகனுன பெருங்கிள்ளி உறையூரிற் பட்டமெய்தினன். திருக்கோவலூர்ச் சிற்றரசனும் பெருவீரனுமாகிய மலையமான் திருமுடிக்காரி|| என்பவன் உறையூர்ச்சோழர்க்

* சிலப்பதி. 8: 3—4. † கரிகாற்பெருவளத்தான், உறையூரை நீங்கிப் புகாரைத் தன் தலைநகராகக்கொண்டானென்று பட்டினப்பாலை (அடி-285.) குறிப்பிக்கும். ‡ புறம். 44, 45, 47-ம் பாடல்கள் காண்க. $ இவனே, மணிமேகலையிற்கண்ட சோழன். ¶ புறம்-47. § மணி. 19: 126—28. || இவனே கடையெழுவள்ளல்களுள் ஒருவனுகிய காரி.

குச் சேனாபதியாகவிருந்து உதவிபுரிந்து வந்தான்; ஆனால், இவனும் அதிர்ஷ்டவீனத்தால் இடையில் இறந்துவிட்டான். விடவே, ஆண்டில் இளையனாய்ப் பட்டமெய்திய பெருநற்கிள்ளிக்கு விரோதமாக அவன் ஞாதியரசரெல்லாம் கிளம்பிப் பெருங்கலகம் விளைப்பாராயினர். இக்காலத்தே, அவ்விளஞ்சோழன் தனக்குப் பெருந்துணைவனாகவிருந்த மலையமானது முள்ளூர்மலையில் ஓடி ஒளிக்கும்படி நேர்ந்தது. இவனை இவ்வாபத்துக் காலத்திற் காத்துவந்தவன், முற்கூறிய மலையமான்மகன் திருக்கண்ணன் என்பான்.* இங்ஙனம் தன் அம்மான்மகனுக்கு நேர்ந்த ஆபத்தைக் கேட்டதும், செங்குட்டுவன் விரைந்துசென்று, அவனுக்குப் பகைவராய்த் தோன்றிய சோழரொன்பதின்மரை உறையூரையடுத்த நேரிவாயிலில் அழித்துத் தன் மைத்துனச்சோழனைப் பட்டத்தில் நிறுவினான்.† இச்செய்தி முன்னரும் விளக்கப்பட்டது. இங்ஙனம் செங்குட்டுவன் செய்தது, அவன் இரண்டாமுறை வடநாடு சென்றுவந்ததற்கு இரண்டொரு வருஷங்கட்கு முந்தியதாகும்; அஃதாவது—அவனது 45-ம் வயதை ஒட்டியதாதல்வேண்டும். இவ்வாறு, செங்குட்டுவனால் உதவி புரியப்பெற்றவனே, பிற்காலத்திற் பெருவீரனாய், 'இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளி' எனச் சிறப்பிக்கப்பெற்றவன் எனத் தெரிகின்றது.‡ இவனே, செங்குட்டுவன், கண்ணகிக்குக் கோயிலெடுத்துச் சிறப்பித்த செய்திகேட்டுத் தானும் உறையூரிற் கோயிலொன்றுகட்டி, அப்பத்தினிக்குத் திருவிழாவெடுத்துச் சிறப்பித்தனன்.§ செங்குட்டுவனம்மானையும்

* புறநானூறு. 174-ம் பாட்டில் இச்செய்தி குறிப்பிடப்படுதல் காண்க. † சிலப். 27: 118—23. ‡ புறம். 16. § சிலப். உரைபெறு கட்டுரை.

அம்மான்சேயையும்பற்றி யாமீண்டெழுதியவற்றிற் சில புறநானூறு முதலியவற்றைக்கொண்டு ஊகித்தனவாம்; ஆதலின், அறிஞர் அவற்றை ஏற்றபெற்றி ஆராய்ந்துகொள்ளக் கடவர். இவற்றால், செங்குட்டுவன் காலத்துச் சோழரை அடியில்வருமாறு குறிக்கலாம்.

| [உறையூர்] | [புகார்] |
|---|---|
| மணக் கிள்ளி | கரிகாற்பெருவளத்தான். |
| \| | \| |
| (காரியாற்றுத்துஞ்சிய) நெடுங்கிள்ளி | கிள்ளிவளவன். |
| \| | \| |
| (இராசசூயம் வேட்ட) பெருநற் கிள்ளி. | (சேட்சென்னி) நலங்கிள்ளி. |

---

## [பாண்டியர்.]

இனிச் செங்குட்டுவன்காலத்து விளங்கிய பாண்டியர் ஆரியப்படைதந்த நெடுஞ்செழியனும், அவன் தம்பியோ மகனோவாகிய வெற்றிவேற்செழியனுமாவர். செங்குட்டுவன் சிறியதந்தையும் இமயவரம்பன்-நெடுஞ்சேரலாதன் தம்பியுமாகிய பல்யானைச்செல்கெழுகுட்டுவனும், ஆரியப்படைதந்த நெடுஞ்செழியனும் சமகாலத்தவராகத் தெரிகின்றது.* பிற்கூறிய செழியனே கோவலனை அநியாயமாகக் கொல்வித்து அவ்வநீதியை உணர்ந்து தன்மனைவியுடன் உயிர்விட்டவன். "வடவாரியர் படைகடந்து, தென்றமிழ்நாடொருங்குகாணப், புரைதீர்கற்பிற் றேவிதன்னுடன், அரசுகட்டிலிற் றுஞ்சிய பாண்டியன் நெடுஞ்செழியன்" என்று இவனைச்சிறப்

* இது, சிலப்பதிகாரம் கட்டுரைகாதையில் வரும் பராசரனென்னும் பார்ப்பான் வரலாற்றால் அறியப்படும்.

பித்துக் கூறுவர் இளங்கோவடிகள்.* இப்பாண்டியன் பெரிய வீரனும் அரியபுலமையும் உடையவன். இவன்பாடிய பாடலொன்று புறநானூற்றிற் (183) காணப்படுவது கொண்டு, இவனது புலமையும் தருமசிந்தையும் அறியலாம். இச்செழியன் கண்ணகிவழக்கைக் கேட்டு இறந்ததும், கொற்கையில் இளவரசாய் ஆட்சிபுரிந்துவந்த வெற்றிவேற்செழியன் தென்னாட் டாட்சிக்கு உரியவனாயினன். செங்குட்டுவன் வடக்கே யாத்திரைசென்றிருந்த காலத்தில், இச் செழியனுக்கு முடிசூட்டுற்சவம் நடைபெற்றது.† இவன் பட்டமெய்தியதும், நன்மாறன் என்னும் வேறுபெயர் பூண்டனனென்று கருதப் படுகிறது. கோவலன் கொலையுண்டமைக்குப் பொற்கொல்லனே காரணமாயிருந்தமையால் அச்சாதியாரனைவர்மேலும் இப்பாண்டியன் பெருஞ்சீற்றங்கொண்டு, அவர்களு ளாயிரவரைக் கண்ணகியின்பொருட்டுக் களவேள்விசெய்து கொன்றானென்றும், அதற்கு அப்பத்தினி உவந்தருளினளென்றுங் கூறுவர்.‡ இவ்வரசன் சிலகாலமாட்சிபுரிந்து இறந்ததும், இவன்மகனாய்ப் பட்டமெய்தியவன் நெடுஞ்செழியன் என்பவனாகத் தோற்றுகின்றான். மிகச்சிறுபிராயத்திலே சிறந்தவீரனென்று பேர்பெற்றவன், இச்செழியன். தன்னுடனெதிர்த்த தமிழரசர் எழுவருடன் இவன் அதிபால்யத்தில் தலையாலங்கானம் என்றவிடத்து நிகழ்ந்த போரில் வெற்றிபெற்றசெய்தி முன்னூல்களிலே பெரிதும் புகழப்படுகின்றது.§ இந்நெடுஞ்செழியனுக்குப் பின் பட்டமெய்தியவன் உக்கிரப்பெருவழுதி

---

* சிலப். மதுரைக்காண்டத்தினிறுதிக் கட்டுரை. † சிலப். 27: 114—138. ‡ இந்நூல். பக்-96. § புறம். 77; அகம்—36. சின்னமனூர்த் தாமிர சாஸனமும் இவன் போர்ச்செய்தி கூறுதல் அறியத்தக்கது. (Vide Madras G. O. No. 503 Public dated 27-6-07.)

என்பவனாதல் வேண்டும். கடைச்சங்கமிருந்த பாண்டியருள் இவனையே இறுதியில்வைத்து நூல்கள் கூறுதல் காண்க.* இச் செழியன், கானப்பேர்† என்ற ஊரைப்பிடித்து அதன் தலைவனான வேங்கைமார்பனைப் போரில்வென்றவன். எட்டுத் தொகையுள் ஒன்றாகிய அகநானூறு தொகுத்தவனும் இவ் வரசனேயாவன். செங்குட்டுவன் அம்மானாகிய பெருநற் கிள்ளியும், சேரமான் மாவெண்கோவும், இவ்வுக்கிரப்பெரு வழுதியும் மிக்கநட்பினராயிருந்த செய்தி ஒளவையார்பாட லொன்றால்‡ அறியப்படுகின்றது. இவற்றால், நம் சேரர் பெருமான்காலத்தில் ஆட்சிபுரிந்த பாண்டியரை அடியில்வரு மாறு கொள்ளலாம்.

ஆரியப்படைதந்த நெடுஞ்செழியன்
|
வெற்றிவேற்செழியன் என்ற
நன்மாறன்
|
தலையாலங்கானத்துச் செருவென்ற
நெடுஞ்செழியன்
|
கானப்பேர்தந்த
உக்கிரப்பெருவழுதி.

---

[சேரர் கிளையினர்.]

செங்குட்டுவனுடைய மாற்றாந்தாய்மக்களையும் அவன் ஞாதியரான இரும்பொறைகளையும் 'சேரவமிசத்தோர்' என் னும் பகுதியுள் விரித்துக்கூறினேம். இவருள், மாற்றாந்

---

* இறையனார் களவியல் உரைப்பாயிரம். † இஃது, இப்போது பாண்டி நாட்டின் காளையார்கோயில் என வழங்கும் தலமாகும். ‡ புறம். 367.

தாய்ச் சகோதரரான நார்முடிச்சேரலும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும், ஞாதியராகிய செல்வக்கடுங்கோவும் பெருஞ் சேரல் என்பவனும், செங்குட்டுவன் காலத்தவராகத் தெரிகின்றனர். மேலேகூறிப்போந்த முறையே, பண்டைநூல்களிற் கண்ட செய்திகள் பலவற்றுக்கும் மிகப் பொருந்துவதென்பது, அறிஞர் நுணுகி அறியத்தக்கது.*

---

* காலஞ்சென்ற ஸ்ரீ. கனகசபைப்பிள்ளையவர்கள் தம் '1800-வருஷத்துக்கு முற்பட்ட தமிழர்' (The Tamils 1800-years ago) என்னும் அரியநூலில், செங்குட்டுவன்மரபை முற்றும் வேறுபடக் குறித்திருப்பதோடு, ஏனைச் சோழர்வமிசத்தையும் சிறிது மாற்றியெழுதியிருக்கின்றனர். அவர்கள் கருத்துப்படி, செங்குட்டுவன் தந்தை—செல்வக்கடுங்கோ வாழியாதனும், தாய்—கரிகாலன் மகளுமாவர், ஆனால், பதிற்றுப்பத்தின் 5-ம் பதிகத்தில் "குடவர்கோமான் நெடுஞ் சேரலாதற்குச் சோழன் மணக்கிள்ளி" மகளீன்ற மைந்தன் எனச் செங் குட்டுவன் கூறப்படுகின்றான். இதனால், இவன்றந்தை நெடுஞ்சேரலாதனென்பதும், தாய் மணக்கிள்ளியின் மகளென்பதும் விளக்கமாகும். இனிப் பிள்ளையவர்கள், மாந்தரஞ்சேர விரும்பொறையைச் செங்குட்டுவன் மகனாகக் கருதினர். செங்குட்டுவன்மகன் குட்டுவஞ் சேரலென்பது பதிற்றுப்பத்தின் 5-ம் பதிகத்தால் நன்கறியப்படும். மாந்தரஞ்சேரல், சேரர்கிளையினராய்த் தொண்டியாண்ட இரும்பொறைமரபினனாவன். இம்மாந்தரன் மகனாகப் பெருஞ்சேரலிரும்பொறையைப் பிள்ளையவர்கள் குறித்திருப்பதும் மாறாகும். இப் பெருஞ் சேரல், செல்வக்கடுங்கோவாழியாதன் மகனாவன். இஃது அவனைப் பற்றிய 8-ம் பத்துப் பதிகத்துவரும் 'பொய்யில் செல்வக்கடுங்கோவுக்கு வேளாவிக்கோமான் பதுமன்தேவியீன்ற மகன்' என்னுந் தொடரால் விளக்கமாம். ஆகவே, இந்நூலின் முதலிற்குறித்த முறைப்படி சேரர் மரபினரைக்கொள்ளுதலே பெரிதும்பொருத்தமென்பது ஆராய்ந்தறியத்தக்கது. இனிச் சோழர்மரபினரை முன்குறித்தபடி இருபகுதி

[வேறு அரசர்கள்.]

இனிச் சேரன்-செங்குட்டுவன் காலத்திருந்த [illegible]யரான அரசர்கள்:—(1) கொங்கிளங்கோசர், (2) கயவாகு, (3) நூற்றுவர் கன்னர், (4) அறுகை என்போர். இவருள், கொங்கிளங்கோசரென்போர் குடகுநாட்டை ஆண்டவர்கள்.* கயவாகு இலங்கையை ஆட்சிபுரிந்தவன். நூற்றுவர்கன்னர் என்போர் கங்கையின் வடகரையிலுள்ள பிரதேசங்களையும் மாளுவநாட்டையும்† ஆட்சிபுரிந்தோர். அறுகையென்பவனும் அவ்வடநாட்டரசரில் ஒருவனாகத் தெரிகின்றது. இவரெல்லாம் செங்குட்டுவனுக்கு மிக்க நட்பாளராக விளங்கியவரென்பது சிலப்பதிகாரம் பதிற்றுப்பத்து முதலியவற்றால் தெளிந்தது. இன்னோர் செய்திகள் "செங்குட்டுவன் காலவாராய்ச்சி"

---

வினராகக் கொண்டு, உறையூர்ச்சோழர்கிளையில் மணக்கிள்ளியையும், அவன் மகனாக நெடுங்கிள்ளியையும், அவன் மகனாகப் பெருநற்கிள்ளியையும் காட்டுதலும்; புகார்ச்சோழர்கிளையில், கரிகாலன், கிள்ளிவளவன், நலங்கிள்ளி என்பவரை முறையே காட்டுதலும் பொருத்தமாம். மணக்கிள்ளியின் மகளும் நெடுங்கிள்ளிக்குடன்பிறந்தாளுமாகிய நற்சோணை, செங்குட்டுவன்தாயென்பதுங் குறிக்கத்தக்கது. பாண்டிய வமிசாவளியாகப் பிள்ளையவர்கள் குறிப்பிட்டவை, முன்னூல்களோடு பொருந்தும்.

* இதனால், முற்காலத்துக் கொங்குதேசம், குடகுநாடாயிருந்தமை பெறப்படும்.

† 'குடகக் கொங்கரு மாளுவவேந்தரும்' என்புழி இளங்கோவடிகள் குறித்த மாளுவவேந்தர், செங்குட்டுவன் நட்பரசரான கன்னரேயாதல் வேண்டும். ஏனெனில், கண்ணகியின் சிலைக்கு மிகவும் உதவிசெய்த கன்னர், அப்பத்தினிப் பிரதிஷ்டைக்கு வந்திருக்கத்தவறாராதலால், அவர்வருகையை அடிகள் குறியாதிரார் என்க.

என்ற பகுதியினும் விரிவாக வருதலால், இங்குக் கூறப்பட்டில. இவர்களன்றித் தமிழ்நாட்டில் செங்குட்டுவன்காலத்து விளங்கிய சிற்றரசரும் பலராவர். புறநானூறு அகநானூறு முதலிய சங்கச்செய்யுள்களை ஆராயுமிடத்து, அவற்றிற் குறிக்கப்பட்ட சிற்றரசரில் அநேகர் இவன் காலத்தவராக அல்லது இவன்காலத்தை ஒட்டியிருந்தவராகவே புலப்படும். அவரையெல்லாம் ஈண்டுக்காட்டின் விரியும். இனிச் செங்குட்டுவனுக்குப் பகையரசராய் இருந்தவரைப்பற்றி இவனது போர்ச்செய்தி கூறப்பட்டவிடத்தும் பிறவிடங்களிலும் கூறியுள்ளோம்.

---

9-ம் அதி:—

சேங்குட்டுவனைப் பாடிய

## இருபெரும் புலவர்கள்.

சேரன்-செங்குட்டுவன்காலத்தே, தமிழ்நாட்டிற் புலவர் பெருமக்களாக விளங்கியவர், பலர்; இவரெல்லாம் தமிழ்ப் பேரரசர்களாலும் சிற்றரசர்களாலும் பெரிதும் அபிமானித்து ஆதரிக்கப்பட்டுவந்தனர். எட்டுத்தொகை நூல்களிற் காணப்பட்ட புலவர்பெருமக்களிற் பலர், செங்குட்டுவன்காலத்தும் அவனையொட்டியும் ஒருநூற்றாண்டுக்குள் விளங்கியிருந்தவராகவே, அன்னோர்பாடிய அரசர் முதலியவரின் தொடர்புகள்கொண்டு அறியப்படுகின்றனர். இங்ஙனம் இச்சேரனை அடுத்திருந்த புலவர்வரலாறுகளையெல்லாம் விரிப்பிற்பெருகும்; ஆயினும், செங்குட்டுவனால் நேரில் அபிமானிக்கப்பட்ட புலவரிருவரைமட்டும் இங்கே குறிப்பிடல் தகும். அவராவார்:—பரணரும் சாத்தனாரும்.

[பரணர்.]

இவருட் பரணரென்பவர், கடைச்சங்கமிருந்த புலவர் பெருமக்களுள் ஒருவர். இவரைப்போல அக்காலத்தே புகழ் பெற்றிருந்தவர், கபிலர் ஒருவரேயெனலாம். அந்தணர்குல திலகராகிய இப்பரணர், செங்குட்டுவனைப் பதிற்றுப்பத்தின் ஐந்தாம்பதிகத்தாற்பாடி, அவனது வீரங்கொடை முதலியவற்றை விளக்கியிருக்கின்றார். இவர் பாடல்களைக்கேட்ட சேரர் பெருமான் மகிழ்வுற்று உம்பற்காடு என்னும் சேரநாட்டுப் பகுதியின் அரசிறைவருவாயையும், தன் மகன் குட்டுவஞ் சேரலையும் பரணர்க்குப் பரிசாகக்கொடுத்தான் என்று, அப்பத்தின் இறுதிவாக்கியங் கூறுகின்றது. தன் மகனைப் பரிசளித்தான் என்பதற்கு, பரணரிடம் அவனை மாணாக்கனாக ஒப்பித்தசெய்தியைக் குறிப்பதாகக் கொள்ளுதலே பொருந்தும். இப்பரணர் தம் பாடல்களிலே, செங்குட்டுவன் கடலிடையிருந்த தன்பகைவர்மேற் படையெடுத்து மரக்கலங்களைச் செலுத்திய பேராற்றலையே மிகுதியாகப் புகழ்கின்றனர். செங்குட்டுவன்தந்தை நெடுஞ்சேரலாதனாலும் இப்புலவர் அபிமானிக்கப்பட்டவரென்பது, அச்சேரலாதன் சோழனுடன்புரிந்த பெரும்போரில் இறந்துகிடந்தபோது, இவர் உருகிப்பாடிய பாடலொன்றால்* உணரப்படுகின்றது. மற்றும், இவராற்பாடப்பெற்றதமிழரசர், உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னியும்† வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும், வையாவிக்கோப் பெரும்பேகனும்‡ அதிகமானஞ்சியும் வேறு சிலருமாவர். ஔவையாராலும் அருமையாகப் புகழ்ந்து

* புறம்-62. † இவன், கரிகாற்பெருவளத்தான் தந்தை.

‡ பேகனும் அதிகனும் கடையெழுவள்ளல்களைச் சேர்ந்தவர்.

கூறப்பட்டவர் இப்புலவர்பெருமானெனின் வேறு மிகுத்துச் சொல்வதென்னை?* எட்டுத்தொகைநூல்களிலே, இவர் பாடியனவாக 82-செய்யுட்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களால் அறியப்படும் விசேடங்களையெல்லாம், மஹாமஹோபாத்யாய-ஐயரவர்கள் பதிற்றுப்பத்துப்பதிப்பின் முகவுரையில் நன்குவிளக்கியிருத்தலால், இங்கு அவற்றை எடுத்தெழுதுவது மிகையென விடுத்தோம்.

[சாத்தனார்.]

இனிச் சாத்தனார் என்பவரும், கடைச்சங்கப் புலவருள் ஒருவரே; இவர் மதுரையில் நெல்லுப்புல்லு முதலிய கூலவியாபாரஞ்† செய்துவந்தமையால், மதுரைக் கூலவாணிகன் சாத்தனார் எனப் பெயர்பெற்றனர். சங்கத்தில் அரங்கேற்றற்பொருட்டுப் பிறர் பாடிவரும்நூல்களிற் குற்றங்காணுந்தோறும், அவற்றுக்கு மனம்பொறாது தம்விதியைநொந்து தலையிற் குத்திக்கொண்டு வந்தவர் இவரென்றும், அதுபற்றிச் சீத்தலைச்சாத்தனார் என வழங்கப்பெற்றார் என்றுங் கூறுவர். இவரது தலைக்குத்துத் திருவள்ளுவரது முப்பாலைக் கேட்டபோது முற்றும் நீங்கியதென்பது—

"சீந்திநீர்க் கண்டந் தெறிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில்—காந்தும்
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலாற்
றலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு"

---

* புறம்-99.

† கூலம் என்பன—நெல்லுப் புல்லு வரகு தினை சாமை இறுங்கு தோரை இராகி என்பன.

என்னும் மருத்துவன்-தாமோதரனார் வாக்கால்* அறியப்படு கின்றது. இச் சாத்தனார் பௌத்தமதச் சார்புடையவரென்பது, மணிமேகலையில், அம் மதவிஷயங்களை உணர்ச்சியுடனும் உருக்கத்துடனும் மிகவழகாக இவர் பாடுதலினின்றும், ஏனைய மதங்களை அங்ஙனம் கூறாமையினின்றும் உய்த்தறியலாம். முற்காலத்து வழங்கிய சமயநூல்களிலும் தருக்கமுதலியவற்றினும் மிகுந்த ஆராய்ச்சியுடையார் இவரென்பதும், வடநூற்பயிற்சி பெரிதுடையவரென்பதும் மணிமேகலையால் தெளிவாகின்றன. கோவலன் கொலையையும், கண்ணகியின் சிற்றத்தால் விளைந்த மதுரைக்கேட்டையும், கோவலன்மகள் மணிமேகலைதுறவையும் இப்புலவர் நேரில் அறிந்தவர். செங்குட்டுவன் தன் சகோதரருடன் பெரியாற்றங்கரையில் தங்கியிருந்தபோது, இப் புலவர்பெருமானும் அவனுடன் சென்றிருந்தார். அப்போது மலைவாணர்பலர் வந்து, தங்கள்மலையில் கண்ணகி சுவர்க்கம்புக்கசெய்தியைச் செங்குட்டுவனுக்குத் தெரிவிக்க, இச் சாத்தனார், தாம் மதுரையில் நேரிலறிந்த அவள்வரலாறுகளை அரசனுக்கு விரித்துரைத்தனர். இவர் தெரிவித்த செய்திகளைக்கொண்டே, இளங்கோவடிகள், கண்ணகியின் சரித்திரத்தைச் சிலப்பதிகாரமென்னுஞ் சிறந்த காப்பியமாகப் பாடுவாராயினர். இவ்வடிகள் சிலப்பதிகாரத்தைப் பாடிமுடிப்பதற்கு முன்பே, சாத்தனார் கோவலன்மகள் மணிமேகலையின் துறவைப்பாடி முடித்திருந்தனரென்பது, 'மணிமேகலைமே லுரைப்பொருண் முற்றிய சிலப்பதிகாரமுற்றும்' என்ற இளங்கோவடிகள்கூற்றே அறிவிக்கின்றது. கண்ணகி மணிமேகலையிருவர் சரிதங்களையும்

* திருவள்ளுவமாலை, 11.

செங்குட்டுவன் சகோதரரான அவ்வடிகளே பாடக்கருதியிரு ந்தனரென்றும், சாத்தனார் மணிமேகலை துறவைப் பாடிமுடித் துவிட்டமை தெரிந்து சிலப்பதிகாரத்தை மட்டும் அவரியற் றினரென்றும் அடியார்க்குநல்லார் பதிகவுரையிற் குறிப்பிடு வர். சாத்தனார் தாம்பாடிய மணிமேகலையை இளங்கோவடி களைத் தலைமையாகக்கொண்ட அவைக்கண்ணே அரங்கேற்றி னரென்பதும், இளங்கோவடிகளும் தம் சிலப்பதிகாரத்தைச் சாத்தனார்முன்பு அரங்கேற்றினரென்பதும் அவ்விருவரும் பாடிய பதிகங்களால் தெரிகின்றன. சாத்தனார் செங்குட்டு வனாற் பெரிதும் அபிமானிக்கப்பட்டதோடு அவன் சபையை அலங்கரித்த புலவர்பெருமானாகவும் விளங்கினர்.* மலைவளங் காணவேண்டிச் செங்குட்டுவன் பேரியாற்றங்கரையில் தங்கி யிருந்தபோது, இவரும் அவனுடன் சென்றிருந்து, சேரனது செல்வப்பொலிவைக் கண்டுவியந்தனர் என்பது "கண்களி மயக்கத்துக் காதலோடிருந்த-தண்டமிழ் ழாசான் சாத்தன்" என அடிகள் கூறுதலால்† அறியலாம். தம் நகரத்தரசனாக விளங்கிய ஆரியப்படைதந்த—நெடுஞ்செழியன் கோவலன் கொலைகாரணமாக இறந்ததும், சாத்தனார் வஞ்சிசென்று செங்குட்டுவனால் ஆதரிக்கப்பட்டார் என்பதும், பின் பாண்டி நாட்டை அந்நெடுஞ்செழியன் தம்பி வெற்றிவேற்செழியன் என்ற நன்மாறன் ஆட்சிபுரியத்தொடங்கியதும், இவர், தம் ஊராகிய மதுரைசென்று அப்பாண்டியனால் அபிமானிக்கப் பட்டனரென்பதும் உய்த்தறியப்படுகின்றன. சாத்தனார் இந் நன்மாறனைப்பாடிய பாடலொன்று புறநானூற்றுள் (59)

---

* சிலப். பதிகம். 10; ஷை. 25: 106. † ஷை. 25: 65—66.

காணப்படுதல் அறியத்தக்கது. இம்மாறன், 'சித்திரமாடத்துத் துஞ்சிய' என்னும் அடையுடன் பிற்காலத்தில் வழங்கப்பட்டான். நக்கீரர் முதலியோராற் பாடப்பட்டவனாக அந்நூலிற்கண்ட 'இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாற'னின் இவன் வேறானவன். நற்றிணை முதலிய தொகைநூல்களிலே இச்சாத்தனாராற் பாடப்பட்டனவாகக் காணப்படும் செய்யுள்கள் சிலவுண்டு. இப் புலவர்பெருமானது வாக்கினினிமையும் பெருமையும் பிறசிறப்புக்களும், மஹாமஹோபாத்யாய-ஐயரவர்கள் வெளியிட்ட மணிமேகலைமூலம் அறிஞரெல்லாம் அறிந்து மகிழ்ந்தவையாதலால், இங்கு விரித்திலேம்.

---

## 10-ம் அதி:—

## செங்குட்டுவன்

## நாடும்—வஞ்சி மாநகரமும்.

### 1. நாடு.

சேரதேசம் என்பது, கருவூர்ப்பிரதேச முட்படக் கோயம்புத்தூர் சேலம் நீலகிரி 'ஜில்லா'க்களும், மைசூர்நாட்டின் தென்பகுதியும் மேற்குத்தொடர்ச்சிமலை நெடுகவுள்ள கடற்கரைப் பக்கங்களுமாம். இந்நாடு, ஒவ்வொருகாலத்து விரிந்துங்குறைந்து மிருந்தமையால், இதனெல்லையை வரையறுத்துக் கூறுதல் அரிது. செங்குட்டுவன், அவன்காலத்தே சிறந்துவிளங்கிய பெருவீரனாதலின், அவன் நாடு, பண்டையினும் விரிவுடையதாகவே இருந்திருத்தல்வேண்டும். இவன் வென்றடிப்படுத்திய நாடுகளில், கொங்கர் என்பதும் ஒன்

ருகக் கூறப்பட்டுள்ளது. இஃது இப்போது மைசூரிராஜ்யத் துள் ஒரு பகுதியாக அடங்கும். இதனை இச்சேரன் வென் றான் என்றதற்கேற்பப், பழைய சாஸனமொன்று, கொடுகூர் நாட்டைச் சேரமானுக்குரிமைகூறிச் செல்கின்றது.* அன்றி யும், மைசூரின் பெரும்பகுதி சேரநாடாயிருந்த தென்று வேறு சாஸனங்களாலும் விளங்குதலால்,† முற்காலத்தே சேரதேசம் அதிகவிஸ்தீரணம் பெற்றிருந்ததாகவே கொள்ள லாம். இத்தேசத்துள்ளே, மேற்குமலைத்தொடர்ச்சிக்கு உள் ளடங்கிய மலைநாட்டில் செங்குட்டுவனுக்கும் உரிமையுண்டா யினும், அதன் பெரும்பகுதியை அவன் ஞாதியரசர் ஆண்டு வந்தனரென்பது முன்னரே குறிப்பிட்டோம். ஆயினும், நம் சேரனுக்குவழங்கிய செங்குட்டுவன் என்ற பெயர்க்கேற் பக்கொள்ளுமிடத்துக் குட்டநாடு‡ இவனாட்சிக்குட்பட்டதா கச்சொல்லல் பொருந்தும். இதுபற்றிப்போலும், அக்குட்ட நாட்டிற்குள் அடங்கிய பேரியாற்றுக்கு மலைவளங் காண்டல் வேண்டிச் செங்குட்டுவன் சென்றிருந்ததூஉம் என்க. ஆயின், அப் பேரியாறு சங்கமமாகுமிடத்தமைந்த முசிறி என்னும் கடற்கரைப்பட்டினம் நம் சேரனைச் சேர்ந்ததாதல் வேண்டும். இம்முசிறி அந்நிய தேசங்களுடன் 'ஏற்றுமதி' 'இறக்குமதி'ச் சம்பந்தம்பெற்றுப் பழையகாலத்தில் மிகப் பிரசித்திபெற்றிருந்தது.

---

* இந்நூல் 29-ம் பக்கத்துக் கீழ்க்குறிப்புப் பார்க்க.

† Dr. Fleet's History of Deccan. p. 189.

‡ இது, கொடுந்தமிழ் நாடுகளுள் ஒன்று ; இன்றும் இப்பெயரு டன் வழங்குகின்றது; கோட்டயத்துக்கும் கொல்லத்துக்குமிடையில், பாலையாற்றுற் பல ஏரிகளும் தீவுகளுமுடையதாகி இப்பிரதேசமிருத் தலால் 'குட்டநாடு' என வழங்கப்பட்டதாகக் கருதப்படுகின்றது.

## 2. வஞ்சிமாநகரம்.

தமிழ்நாட்டை ஆண்டுவந்த மூவேந்தருள்ளே, சோழ பாண்டியர்க்கு உறையூர் புகார் மதுரைகள் எவ்வாறு பழைய தலைநகரங்களாக விளங்கினவோ, அவ்வாறே, சேரரது தொன்றுதொட்ட இராஜதானி *வஞ்சிமாநகரமாகும். மேல்கடலில் தொண்டி மாந்தை என்னுந் துறைமுகநகரங்களும், சேரர்க்குச் சிறந்த தலங்களாயினும் வஞ்சிமாநகர்க்கு அவை அடுத்த தரத்தனவேயாம். இவ்வஞ்சிக்குக் கருவூர் என்பதும் ஒரு பழம்பெயர். இந்நகரம் ஆன்பொருநையாற்றங் கரையில் அமைந்து விளங்கியதாம்.

"நெடுந்தேர்க் கோதை—
திருமா வியனகர்க் கருவூர் முன்றுறைத்
தெண்ணீ ருயர்கரைக் குவைஇய
தண்ணான் பொருநை மணலினும் பலவே"
(அகநானூறு. 93.)

"தண்பொருநைப் புனற்பாயும்
விண்பொருபுகழ் விறல்வஞ்சி" (புறம். 11.)

"தண்பொருநை சூழ்தரும் வஞ்சியார் கோமான்"(சிலப்-29.)

எனக் காண்க. ஆன்பொருநையாற்றின் அலை, வஞ்சிக்கோட்டைமதிற்றாக்கும்படி அவ்யாறு நெருங்கிச் செல்வதென்பது, "வஞ்சிப் புறமதி லலைக்குங் கல்லென் பொருநை"

* இந்நகரத்தைப் பூவாவஞ்சி (சிலப். 26. 50), வாடாவஞ்சி (28-180) பொற்கொடிப் பெயர்ப்படூஉம் பொன்னகர் (மணி. 92.) கோநகர் (சிலப். 27. 255) என முன்னூல்கள் அணிந்து கூறும்.

என்னும் புறப்பாட்டடியால் (387) விளங்கும். இவ் வான் பொருநை—ஆனி, வானி, ஆன்பொருந்தம், தண்பொருநை, சூதநதி எனவும் கூறப்படும்.*

கருவூராகிய வஞ்சிக்குப் பக்கத்தோடும் ஆன்பொருநை யோடு நேர்கிழக்கிற்செல்லும் காவிரியும், குடவனாறும் சங் கமமாகும் கூடலொன்று உண்டு ; இதனை—

"செங்குணக் கொழுகுங் கலுழி மலிர்நிறைக்
காவிரி யன்றியும் பூவிரி புனலொரு
மூன்றுடன் கூடிய கூட லனையை" (பதிற்-50.)

எனச் செங்குட்டுவனைப் பரணர் பாடுதலால் அறியலாம். "மூன்றுடன் கூடிய கூடலென்றது, அக்காவிரிதானும் ஆன் பொருநையும் †குடவனாறுமென இம்மூன்றுஞ் சேரக்கூடிய கூட்டம்" என்பது பழையவுரை. இந்நதிகளன்றிக் காஞ்சி யென்னும் †ஓர் யாறும் செங்குட்டுவனூட்டிற் பிரபலம்பெற் றது ; 'தீனம்புன லாய மாடுங் - காஞ்சியம் பெருந்துறை' எனக் காண்க.

இவ்வஞ்சிமாநகரின் பழைய அமைப்பு, முன்னூல்களில் அடியில்வருமாறு சிறப்பிக்கப்படுகின்றது. இம்மூதூரின் கோட்டைக்கு வெளியே தேவர்கோட்டங்களும் பொதுஸ்த லங்களும் ஜைநப்பள்ளிகளும் பொழில்களும் பொய்கை

* பிங்கல நிகண்டு, 4. 118. பொருநை என்பது தாமிரபர்ணிக் குத் தனித்த பெயராதலால், அதனின் வேறென்பதைக் குறித்தற்கு ஆன்பொருநை என விசேடிக்கப்பட்டதாகத் தெரிகின்றது.

† குடவனாறு, கருவூர்க்குத் தென்கிழக்கே 12-மைலில், ஆம்பிரா வதியுடன் சங்கமமாகின்றது. இதனைக் காவிரியுடன் கலப்பதாக உரை காரர் எழுதியதற்குக் காரணந்தெரியவில்லை.

களும் மிகுந்திருந்ததோடு, அவ்விடங்களில் தவமுனிவரும் ஞானிகளும் சாஸ்திரவறிஞரும் எங்கும் நிறைந்திருந்தனர். கோட்டையைச் சூழ்ந்துள்ள புறக்குடி அல்லது புறஞ்சேரியில் அரண்காவல்புரியும் படையிருப்புக்களும் அந்நியவரசர் தங்குதற்கமைந்த மாளிகைகளும் இருந்தன. கோட்டையை, ஆழ்ந்தகன்ற அகழி சூழ்ந்திருந்தது. அதனிற் பலவகை முதலைச்சாதிகளும் பெருமீன்களும் நிறைந்திருந்தன. வஞ்சிமாநகருள்ளே பெருகியோடுங் கழிநீரெல்லாம் முடிவில் அவ் வகழிக்கண்ணே சென்று சேர்வதாம். இவ்வகழுக்கும் கோட்டைக்கும் இடையிலே காவற்காடொன்று உண்டு. கோட்டைமதில், பகைவரை அழிக்கத்தக்க எந்திரங்கள் பலவற்றால் மாட்சிமைபெற்றிருந்தது. அதன் வாயிலானது, வேலைப்பாடு மிகுந்து, பல நிலைகொண்ட கோபுரத்தோடுங் கொடிகளோடும், வெள்ளிமலையொன்று உள்கிழிந்தாற்போல விளங்கியது. இவ்வாயிலைக் கடந்து செல்லின், கோட்டைவாயில் காக்கும் காவலாளர் நெருங்கியுறையும் வீதிகளும் மீன்விலைஞரும் உப்புவாணிகரும் கள்விற்போரும் பிட்டு அப்பங்கள் விற்போரும், வாசனைப்பண்டம் விற்போரும் இறைச்சிவிற்போரும் வசிக்கின்ற வீதிகளும் அமைந்திருந்தன. இவ்வீதிகளையடுத்து—மட்கலஞ்செய்யுங் குயவர், செம்பு கொட்டிகள், வெண்கலக்கன்னார், பொற்கொல்லர், தச்சர், மட்பாவைசெய்வோர், தையற்காரர், மாலைகட்டுவோர், சோதிடர், பாணர்முதலியோர் தெருக்களும், சங்கறுப்போர் இரத்தினப்பணியாளர் வீதிகளும், நாடகக்கணிகையர் வீதியும், நெல்லுப் புல்லு முதலிய கூலவகை விற்போர் தெருவும், சூதர் மாகதர் வேதாளிகர், பொதுமகளிர் தெருக்களும்,

ஆடைநெய்துவிற்போர், பொன்வாணிகர், இரத்தினவியாபாரிகள் வீதிகளும், அந்தணர் அக்கிரகாரமும், இராசவீதியும், மந்திரிகள்வீதியும், பல்வகை அரசாங்க அதிகாரிகள்வாழுந் தெருக்களும் அப்பெருநகரில் முறையே அமைந்திருந்தன. இவையன்றி, யாவரும் வந்து தங்குதற்குரிய மாத்தடிகளும், அம்பலமும், முச்சந்தி நாற்சந்திகளும், அருவியோடும் அழகிய செய்குன்றுகளும், இளமரக்காக்களும், பொய்கைகளும், அறச்சாலைகளும், பொன்னம்பலமும், தவப்பள்ளிகளும் விளங்கின. மிகவழகாக அமைக்கப்பட்ட பௌத்த சைத்திய மொன்றும்* அவ்வஞ்சியினுள்ளே திகழ்ந்தது. (மணிமே. காதை. 28)

சேரருடைய அரண்மனையானது அம்மூதூரின் மத்தியில், பொன்மயமானதொரு சிறு மேருப்போலப் பிரகாசித்தது; "நெடுநிலை மேருவிற், கொடிமதின் மூதூர் நடுநின் றோங்கிய, தமனிய மாளிகை" என்பர் இளங்கோவடிகள்.† அதனுள் அத்தாணிமண்டபமும் (கொலுவிருக்கை), வேத்தியன்மண்டபமும் (மந்திராலோசனைச்சபை), மணியரங்குகளும் (நடனசாலை), பிறவும் மாட்சிமைபெற்று விளங்கின. அரசன் தன் மனைவியுடன் வசந்தகாலத்தைக் கொண்டாடுதற்கென்று அமைந்த 'இலவந்திகை வெள்ளிமாடம்' என்னும் மாளிகை யொன்றுண்டு‡. இஃதன்றி, நகர்ப்புறத்தே, பொய்கைகளாலும் சோலைகளாலும் சூழப்பட்ட 'வேளாவிக் கோ

---

* கோவலனுக்கு ஒன்பதாந்தலைமுறைப் பாட்டனான கோவலனால் வஞ்சிநகரிற் கட்டப்பட்டதாக மணிமேகலையிற் கூறப்படும் பௌத்த சைத்தியம் இதுபோலும். (காதை-28. 123—31)

† சிலப். 28. 46—50. ‡ ஷை. 25. 4.

மாளிகை'* என்னும் ஓர் அழகிய மந்திரமும் அமைந்திருந்தது. இது 'வேண்மாடம்' எனவும் வழங்கப்படும்.† செங்குட்டுவன் மாற்றாந்தாய்ப் பாட்டனும், பொதினிமலைத் தலைவனுமான வேளாவிக்கோமான் பெயர்பெற்றிருத்தலால், இம்மாளிகை அவன் வசித்துவந்தது போலும். இவ்வழகிய மாடம் செங்குட்டுவன்காலத்தே அந்நியவரசர் தங்குதற்கென்று உபயோகப்பட்டது.‡ திருமால் பள்ளிகொண்டருளும் ஆடகமாடம்$ என்ற ஆலயமொன்றும் வஞ்சிக்குப் பக்கத்திருந்ததாகக் கருதப்படுகின்றது.

இங்ஙனம், சேரரது பழைய இராசதானியாகச் சிறப்பிக்கப்பட்ட வஞ்சியென்பது யாதென ஆராயுமிடத்து, அஃது, இப்போது திருச்சிராப்பள்ளி ஜில்லாவைச் சார்ந்துள்ளதும், கொங்குநாட்டுத் தலங்களுள் ஒன்றுமாகிய கருவூரே¶ என்பதற்கு வேண்டிய பிரமாணங்கள் எதிர்ப்படுகின்றன. முன்னூல்களிற் கூறப்பட்டவாறே, இவ்வூர் ஆம்பிராவதி நதிக்கரையில் உள்ளதாம்; ஆம்பிராவதி என்பது, ஆன்பொருநையின் வடமொழிப்பெயர்; "பொற்பு மலியாம் பிரவதியான் பொருநை யெனவும் புகலுவரால்" என்பது கருவூர்ப்புராணம்§ [ஆம்பிரம் - மாமரம்] சூதநதி என்று பிங்கலநிகண்டு இதற்கொரு பெயர்கூறுவதும் ஆம்பிராவதி என்பதோடு ஒத்த பொருளுடையதேயாகும்; [சூதம் - மா]. இந்நதி

---

* சிலப்பதி. 28. 197—98. † புறநானூறு. 13. ‡ சிலப். 28. 198. $ ஷை. 26. 62; 30. 51. ¶ கர்ப்பபுரி என்பர் வடநூலார்.

§ இப்புராணம் இற்றைக்கு 290-வருஷங்கட்குமுன் இயற்றப்பட்டதென்பது. அதன் பாயிரச் செய்யுளால் அறியப்படுகின்றது; இனிய வாக்குடையது; நூலாசிரியர் பெயர்முதலிய வரலாறுகள் விளங்கவில்லை.

வராகமலையில் உற்பத்தியாகி மாமரச்சோலைவழியே செல்லுதலால், இப்பெயர்கள் பெற்றதென்பர். "வஞ்சிப் புறமதிலலைக்கும் கல்லென் பொருநை" "தண்பொருநை சூழ்தரும் வஞ்சியார் கோமான்" என முன்னோர் கூறியவாறே, இக்காலத்தும், இவ் வாம்பிராவதி கருவூரையொட்டித் தென்றிசையிலிருந்து கீழ்புறமாகவோடி வடக்கேதிரும்பிக் காவிரியுடன் கலக்கின்றது. இக் கருவூரே, வஞ்சி எனத் தமிழிலும், வஞ்சுளாரணியம் என வடமொழியினும் வழங்கப்படுவதாம்;* "வஞ்சுளா ரணியம் வஞ்சி கருவூர்" என்பது கருவூர்ப் புராணம். இதற்கேற்ப, இந்நகரத்தின் தென்றிசையில் நதிக்கரையிலுள்ள துர்க்காதேவிக்கு வஞ்சியம்மன் என்னும் பெயர் இன்றும் வழங்கிவருதலும், இவ்வூர் அரங்கநாதப் பெருமாள்கோயிற் கர்ப்பக்கிரகத்தின் தென்பக்கத்துக்காணப்படும் சாஸனத்துள்ளே "வஞ்சி... ஸ்ரீவைஷ்ணவரோம்" என்னுந்தொடர் காணப்படுதலும், ஆம்பிராவதிக்கு வடக்கே கோயில்கொண்ட †சிவபெருமான் வஞ்சுளேச்சுரலிங்கம் என அழைக்கப்படுதலும் இங்கு அறியத்தக்கன.

கருவூர்க்கு வடகிழக்கே, ஆம்பிராவதி மணிமுத்தாநதி காவேரி மூன்றுங்கூடுந் திருமுக்கூடல் உள்ளது; "வஞ்சுளாடவிக்குத் தரகுணக்காக வாம்பிர வதிநதி மதிபோல், விஞ்சுமா மணிமுத் தாறுகாவேரி மேவுழி மேவு மேவுதலால், எஞ்சலில் திருமுக்கூடலென் றிசைப்ப" என்பது கருவூர்ப்புராணம்‡. இம் மூந்நதியின் கூடலே "காவிரி யன்றியும் பூவிரி

* வஞ்சிமரம் நிறைந்த காடாதலின் இப் பெயர்பெற்றதென்பர்.

† திருவானிலைப் பசுபதீசுவரர் கோயிற்குத் தென்பாலுள்ளது.

‡ ஆம்பிராவதிச்சருக்கம். 45—மணிமுத்தாநதி, காவிரியுடன்

புனலொரு மூன்றுடன் கூடிய கூட லனையை" எனப் பரணர் செங்குட்டுவனுக்கு உவமித்ததாம். இனிக் காஞ்சி என்னும் யாறும் செங்குட்டுவனாட்டிற் சிறப்புடைய நதிகளுளொன் றென்பது "காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே" என அப்புலவர் நம் சேரனை வாழ்த்துதலாற் றெரியலாம். இவ் ஆறு, நொய்யல், காஞ்சிமாநதி* என அப் பிரதேசத்தில் இன்றும் வழங்கிவருகின்றது; இந்நதிக்கரையிலுள்ள பேரூர் என்னுந் தலத்தைக் காஞ்சிவாய்ப்பேரூர் எனப் பழையசாஸனமும் † பெரியபுராணமும் குறிப்பிடுதலுங் காண்க. இவற் றால், சேரன் செங்குட்டுவனை அவன் தேசத்திலும் நகரத்தி லும் ஓடும் நதிகளோடும் உவமித்து முற்காலவழக்குக்கிணங் கச் சிறப்பித்தனர் பரணர் என்பது நன்கறியப்படும்.

இக்கருவூர்க்குக் கிழக்கே ஆம்பிராவதிக் கரையிலுள்ள அரசவனம் என்னும் பிரதேசத்தில் திருமால் பள்ளிகொண் டருளும் ஆலயமொன்றுண்டு என்று கருவூர்ப்புராணங்கூறு கின்றது.‡ இஃது இப்போது கருவூரில் அரங்கநாதப்பெரு மாள் கோயில் என்று வழங்கப்பட்டு, அப்பெருமாள் பள்ளி கொண்டருளுந் தலமாயுள்ளது. ஆடகமாடம் என்ற பெய ருடன் திருமால் பள்ளிகொண்டருளுங் கோயிலொன்று, இளங்கோவடிகளாற் குறிக்கப்பட்டிருப்பது, மேற்கூறிய சந் நிதியே யாதல்வேண்டும். சிலப்பதிகார அரும்பதவுரையா

---

கலங்குமிடம் இப்போது மேற்கே வெகுதூரத்துள்ளது. முற்காலத்து இந்நதி ஆன்பொருநையுடன்சேர்ந்து காவிரியிற்சங்கமித்ததுபோலும்.

* இந்நதி 108-மைல் நீளமுடையது; ஈரோடு கருவூர்த்தாலூகாக் கள் கூடுமிடத்து நொய்க்குப்பத்தருகில் காவிரியுடன் சங்கமமாகிறது.

† செந்தமிழ், தொகுதி-4, பக். 342; ஏயர்கோன். 88.

‡ ஆம்பிராவதிச்சருக்கம்.

சிரியர், "ஆடகமாடம்-திருவனந்தபுரம்; இரவிபுரம் என்பாரு முளர்" (பக். 68) என்றெழுதினர். ஆனால், செங்குட்டுவன், ஒரேயிரவில் சித்தஞ்செய்து, வடநாட்டிற்குப் பிரயாணித்த அவசர தருணத்தில், ஆடகமாடத்துத் திருமாலின்கோயிற் பிரசாதத்துடன் சிலர் வந்து அவனைக்கண்டனர் என்று அடிகள் கூறுவதை* நோக்குமிடத்து, அக்கோயில், வஞ்சியாகிய கருவூர்க்குப் பக்கத்திருந்ததாகுமே யல்லது, 300-மைலுக்கப்பாலுள்ள திருவனந்தபுரமாகாதென்பது திண்ணம்; ஆதலால், மேற்கூறிய அரங்கநாதப்பெருமாள் சந்நிதியே பழைய ஆடகமாடமாகக் கொள்ளுதல் பொருந்துமெனலாம்.†

செங்குட்டுவன் சிவபிரான்பாற் பக்திமிகுதியுடையனென்பதை முன்னமே விளக்கினோம்;‡ இளங்கோவடிகள்

---

* இந்நூல். பக். 59.

† கருவூர்-அரங்கநாதர்சந்நிதியை யாம் நேரிற்சென்று தரிசிக்க நேர்ந்தபோது, அக்கோயில் சிறியதாயினும் பழமையே காணப்பட்டது; கர்ப்பக்கிரகத்துள்ளே அரவணையிற் பள்ளிகொண்டருளும் பெருமான் சாந்தாகார முடையவரென்று விசாரணையில் தெரிந்தேம். ஆனால், கர்ப்பக்கிரகத்தின் மேற்குவெளிப்பிராகாரத்தை யாம் அடைந்தபோது, ஒரு சிறுபந்தருள், சேஷசாயியாகத் திருமாலினுருவம் வகுக்கப்பட்ட பெரிய சிலையொன்று அற்புதமாக ஆங்குக் காணப்பட்டது. அம்மூர்த்தியின் வரலாற்றை விசாரித்ததில், மடைப்பள்ளியைத் திருப்பணிக்காகப் பிரித்தபோது, பூமியின்கீழ் அவ்வழகிய சிலை அகப்பட்டுச் சில மாதங்களே ஆயினவென்று தெரியவந்தது. இவற்றை நோக்குமிடத்து அவ்வரவணைக்கிடந்த மூர்த்தியே, செங்குட்டுவன்காலத்து "ஆடகமாடத் தரவணைக் கிடந்தோ"னாக வேண்டுமென்றும், ஏதோ ஒரு காலவிசேடத்தால் அம்மூர்த்தி பூமியில்மறைந்து, அதற்குப் பிரதியாக சாந்தாகாரமூர்த்தி அக்கோயிலுள் எழுந்தருளப்பண்ணப்பட்டதென்றும் கருதப்படுகின்றன. ‡ இந்நூல், பக். 97.

வஞ்சியிலிருந்த சிவாலயத்தைப்பற்றி ஒன்றுங் கூறநேராமற் போயினும், 'ஆனேறுயர்த்தோன்' 'செஞ்சடைவானவன்' 'உலகுபொதியுருவத் துயர்ந்தோன்' எனத் தம் தமயனாற் பத்திசெய்யப்பட்ட சிவபெருமானைச் சிறப்பித்தலால், அப்பெருமானுக்கு ஆலயமொன்று அந்நகரில் அமைந்திருந்ததாகக்கொள்ளத் தடையில்லை. ஆயின், அஃது, இப்போதுள்ள பசுபதீசுவரர் கோயிலே ஆதல்வேண்டும். இவ்வாலயம், கருவூர்த் திருவானிலை எனத் தேவாரப்பாடல் பெற்றிருத்தலோடு, சோழர் சாஸனங்கள்பல கொண்டதாகவும் உள்ளது. காமதேனுவாகிய பசுவினாற் செய்யப்பட்ட ஆலயமாதலின் இதற்கு 'ஆனிலை' எனப் பெயர்வழங்கியதென்பர். இதுபற்றியே, இக்கோயிற் சிவபிரான், பசுபதீசுவரர் எனப்பட்டார். இங்ஙனம் கருவூர்க்கு ஆனிலை என்ற பெயரிருத்தல் போலவே, அவ்வூரையடுத்துச் செல்லும் ஆம்பிராவதிக்கு, ஆன்பொருநை ஆன்பொருந்தம் எனப் பெயர்கள்வழங்குதல் கண்டுச் சிந்திக்கத்தக்கது. இனி "பங்குனி விழவின் வஞ்சியொடு, உள்ளி விழவி னுறந்தையுஞ் சிறிதே" எனவரும் முன்னோர் கூற்றும், (தொல்-பொருளதி. பக். 320) "மதுரை ஆவணியவிட்டமே, கருவூர்ப் பங்குனியுத்திரமே, உறையூர் உள்ளிவிழாவே" எனவரும் இறையனார் களவியலுரை வாக்கியமும்,* கருவூரில் நிகழ்ந்த திருவிழாநாளொன்றைக் குறிப்பிடுதல் காணலாம். இக்குறிப்பின்படி, வஞ்சிப்பங்குனி விழா

---

* ஷை. களவியல். 17-ம் சூத்திரவுரை காண்க; இதனுள், 'உறையூர்ப் பங்குனியுத்திரமே, கருவூர் உள்ளிவிழாவே' என மாறிக் காணப்படுகின்றது; ஆயினும் முன் காட்டிய பழையவாக்கிற்கிணங்கக் 'கருவூர்ப் பங்குனியுத்திரமே' என்று பாடங்கொள்ளுதலே பொருத்தமாகும்.

என்பது, கருவூர்ப் பசுபதீசுவரர்க்கு ஆண்டுதோறும் இக்காலத்தும் நடைபெறும் பங்குனியுத்தரத்திருவிழாவாகவே கருதப்படுகின்றது.

இனி, வஞ்சியை மேற்கூறிய கருவூராகக் கொள்ளாது, மலைநாட்டுக் கொடுங்கோளூர் அல்லது திருவஞ்சைக்களம் என்று கருதுவாரும், அந்நாட்டு மேற்குத்தொடர்ச்சி மலை அடிவாரத்துப் பேரியாற்றங்கரையிலுள்ள திருக்கரூர்* என்று கருதுவாருமெனச் சரித்திரவறிஞர் பலராயினர். இவற்றுள் முதலிற் கூறியது, அடியார்க்குநல்லார்க்கும் ஒத்த கொள்கையாயிருத்தலே வியப்பைத்தருவதாம்.† ஆனால், இவ்விரண்டுபக்ஷங்களும், ஆராயுமிடத்துச் சிறிதும் உறுதிபெற்றனவாகக் காணப்படவில்லை. முதலாவது—திருவஞ்சைக்களம் என்பது கொச்சிக்கு வடக்கே 10-மைல் தூரத்தில் பேரியாறு மேல்கடலிற் சங்கமமாகுமிடத்து உள்ளதாம். மகோதை என்னும் கொடுங்கோளூரையடுத்துள்ள இவ்வூர், பாடல்பெற்ற பழைய சிவதலங்களுள் ஒன்றாகும். இத்தலத்தைப் பற்றிச் சுந்தரமூர்த்திநாயனார் பாடிய பதிகத்தில்—"கடலங்கரைமேன் மகோதை யணியார்பொழில் அஞ்சைக்களத் தப்பனே" என்ற தொடரே பாட்டிறுதிதோறும் பயின்றுவருகின்றது. எனவே, அந்நாயனார் காலத்துக்கு முன்பு அத்தலத்துக்கு வழங்கிவந்த பழையபெயர் அஞ்சைக்களம் என்பதே

* திருக்கரூர் (Tiru-karur), கொச்சிக்கு வடகிழக்கே 28-மைலிலும், கோதைமங்கலத்துக்கு 3-ம் மைலிலும் உள்ளதென்றும், அஃது இப்போது பாழூராயிருப்பினும் சிலமான பலபெரிய கட்டிடங்களும் கோயிலும் உடையதென்றும் கூறுவர். (The Tamils 1800-years ago. p. 15).

† சிலப்பதி. பதிகம். 3. உரை:

விளக்கமாகும். ஆகவே, அத்தலத்தை வஞ்சியோடும் சம்பந்த முடையதாகக் கருதற்குச் சிறிதும் ஆதாரமின்மை காண்க.

இனிப் பழைய சேரர்தலைநகரான வஞ்சிமாநகரம் கடற் கரைக்கண்ணதாயின், அதனைச் சிறப்பிக்கப்புகுந்த சிலப்பதி கார மணிமேகலைமுதலிய முன்னூல்கள், உடனொத்த புகார் கொற்கைமுதலிய பட்டினங்களைப்போலவே வஞ்சியையும்* அதன் கடல்வளச் சிறப்பால் வருணித்துக் கூறுமற்போகு மா? ஒருகாலுமில்லை. அங்ஙனம் கடற்கரைச்சம்பந்தம் வஞ் சிக்குக் கொஞ்சமும் காணப்படாமையே, அஃது உள்நாட்டு நகரமென்பதை† விசதமாக்கவல்லது. மேலும், கருவூர் என்ற பெயர் கொடுங்கோளூர் அல்லது திருவஞ்சைக்களத் துக்கு உள்ளதாகப் பிரமாணமொன்றுங் காணப்படாமையும் அறிக.

இனி, ஸ்ரீ: கனகசபைப்பிள்ளையவர்கள் மேற்குத்தொ டரையடுத்துப் பேரியாற்றங்கரையிலுள்ள திருக்கரூரே

* செங்குட்டுவனது வடயாத்திரையில் அவன்சேனை சென்ற தைக் கூறுமிடத்து "வஞ்சிநீங்கித்—தண்டத் தலைவருந் தலைத்தார்ச் சேனையும், வெண்டலைப் புணரியின் விளிம்புசூழ் போத" என இளங் கோவடிகள் கூறியிருப்பது, அச்சேனையின் பரப்புமிகுதியைவருணித்த படியேயன்றிப் பிறிதன்று. வஞ்சி கடற்கரைக்கண்ணதாயின், தானை களின் பெருக்கைக் கூறவந்த அவ்விடத்தே, அவை கடற்கரைவிளிம்பு வரை சென்றனவென்று அடிகள்கூறுவதில் பெருமையும் வியப்புமில் லையென்க. இனி, செங்குட்டுவன் வடநாட்டினின்று திரும்பிவரும் போது, நால்வகை நிலத்தாரும் அடைந்த மகிழ்ச்சிகளை வருணிக்கு முறையில், நெய்தனிலமாக்கள் செய்தியும் கூறப்பட்டதன்றி, கடற் கரைச்சம்பந்தம்பற்றி யன்றென்பதும், அறியத்தக்கது.

† தாலமி (Ptolemy) என்னும் பூர்வயவனாசிரியர், கருவூரை சேரிற் கண்டெழுதிய குறிப்பில், அஃது உள்நாட்டிலிருந்த நகரமாக வே கூறினர் என்பர். (The Tamils 1800 years ago. p. 20).

(Tiru-karur) வஞ்சியாதல் வேண்டுமென்றும், அதற்கேற்ப அங்குள்ள பேரியாறே நூல்களிற் கூறப்பட்டபடி, ஆன்பொருநையாதல் வேண்டுமென்றும் ஒரு புதியகொள்கையை நாட்ட, அதனையே சரித்திரவறிஞர் பலரும் பின்பற்றுவாராயினர். இக் கொள்கைக்கு ஆதாரமாயிருப்பதெல்லாம், கரு,வூரென்ற பெயரொற்றுமையொன்றைத் தவிர, வேறு சாதனமில்லை. இங்ஙனம் பெயரொப்பொன்றையேகொண்டு, நாம் ஒரு முடிவுபடுத்தல் எங்ஙனம் கூடும்? இனி, வஞ்சியிலிருந்த செங்குட்டுவன் 'மஞ்சுசூழ்சோலை மலைகாண்குவம்' என்று, தன் பரிவாரங்களுடன் புறப்பட்டுப் பேரியாற்றையடைந்தானென்று முன்னமே சொன்னோம். இதனால், மலைவளமில்லாததோர் இடத்தே அவன் தலைநகர் அமைந்திருந்ததாதல் வேண்டுமன்றோ? மேற்குமலைத்தொடரின் அடிவாரத்துள்ள திருக்கரூரே செங்குட்டுவன் தலைநகராயின், மலைவளங் காண்டல்வேண்டி அவன் பேரியாற்றங்கரை சென்றானென்று சிலப்பதிகாரங் குறிப்பதில் வியப்புத்தான் என்னை? இதனால், வஞ்சியென்பது, ஆம்பிராவதி அல்லது ஆன்பொருநைப் பக்கத்ததும், மலைவளமில்லாததுமான கருவூரேயாதல் திண்ணமென்க. இங்ஙனமாயின், இக்கருவூரிலிருந்து செங்குட்டுவன் பிரயாணித்த பேரியாற்றங்கரை உத்தேசம் 300-மைல் தூரமுடையதாகல்வேண்டும்.* இவ்விடத்தே ஓர் ஆக்ஷேபத்தைச் சிலர் கூறுகின்றனர்; அஃதாவது—மலைவளங் காணச் சென்ற செங்குட்டுவன் 300-மைல் பிரயாணித்தவனாயின், அந்நெடும் பிரயாணத்தில் அவன் இடையிற்றங்கியே சென்றிருத்தல் வேண்டும்; அங்ஙனஞ் சென்ற செய்

* அறுபதின்காத தூரமென்பர், அடியார்க்குநல்லார். (சிலப். பதிகம். 3. உரை).

தியை அடிகள் குறிக்கவில்லையாதலால், அரசன் சென்றுவந்த பேரியாற்றங்கரை அவன் தலைநகர்க்கு அணித்தாதல் வேண்டும்—என்பதாம்; "அரசனும் உரிமையும் மலைகாண்குவம் என்றுவந்து கண்டவன்றே வஞ்சி புகுந்தமையானும்" என அடியார்க்குநல்லாரும் இக்கருத்தேபட எழுதினர். ஆனால், செங்குட்டுவனது நீண்ட யாத்திரையைக் கூறுமிடமெங்கும் அவன் இடையிற்றங்கிய விவரத்தையும் இளங்கோவடிகள் கூறிச்செல்லு மியல்புடையரோ எனின், இல்லை. இதற்கு நீலகிரியினின்று செங்குட்டுவன் கங்கைக்கப்பால்வரை சென்றுவந்த நெடும்பிரயாணத்தை அடிகள் மிகச் சுருக்கிக்கூறிச் செல்வதே, தக்க சான்றாகும். அன்றியும், வஞ்சியாகிய கருவூருக்கும் பேரியாற்றங்கரைக்கும் நெடுந்தூரமுண்டென்பதற்குச் சிலப்பதிகாரத்தே மற்றொரு சிறந்த சான்றுமுண்டு; இளங்கோவடிகள் தம் தமயனது வடயாத்திரையை வருணிக்குமிடத்து "ஒருநூற்றுநாற்பது யோசனைதூரம், இந்திரன் யானைகளைப் பரப்பிச் செல்வதுபோலச் சென்றான்" என்கிறார்.* ஈண்டு 'ஒருநூற்றுநாற்பது' என்னுந்தொடர், இந்திரனது யானைப்பரப்பின் தூரத்தைக் குறிப்பதென்பதினும் செங்குட்டுவனது பிரயாணதூரத்தைக் குறிப்பதென்பதே பொருத்தமாகும். இன்றேல், நூற்றுநாற்பதென்ற எண்ணை அடிகள் குறிப்பிடுவதற்குத் தக்ககாரணம் வேண்டுமன்றோ? இந்திரனுக்கே அத்தொடர் விசேடிக்கப்பட்டதாயினும், அத்தொகையினளவு தூரத்தை, அடிகள் சேரன் பிரயாணத்துக்கு உவமித்திருப்பது, அவன் சென்றுவந்த பேரியாற்றங்கரை

* "விளையாட்டு விரும்பிய விறல்வேல் வானவன் - ஒருநூற்று நாற்பது யோசனை விரிந்த - பெருமால் களிற்றுப் பெயர்வோன் போன்று" என்பது மூலம் (சிலப். 25—11, 15, 16.)

வஞ்சிமாநகர்க்குச் சமீபித்ததன்று என்பதை வெளியாக்கும் என்பதில் ஐயமில்லை*.

மேற்கூறியவாறு, கருவூரையடுத்து ஆம்பிராவதியும் காவிரியுங்கலக்கும் கூடலையும், நொய்யல் அல்லது காஞ்சி மாநதியையும் பரணர் செங்குட்டுவனுக்கு உவமையாகக் கூறியிருத்தலும், ஆன்பொருநைக் கரையில் வஞ்சியுள்ளதாகச் சொல்லப்படுதலும், கருவூர்க்கும் பேரியாற்றுக்கும் பெருந்தூரமுண்டென்பதை இளங்கோவடிகள் குறிப்பிப்பதும்—சேரரது பழைய தலைநகரம் அந்நதிகள் பாயுமிடங்களுக்குப் பக்கத்தது என்பதற்குத் தக்கசான்றுதல் காணலாம். கொச்சிராஜ்யத்துள்ள கொடுங்கோளூர் அல்லது திருவஞ்சைக்களமாயின், அம் மலைநாட்டு நதியொன்றையும் பரணர் செங்குட்டுவனுக்கு உவமிக்காமல், மேற்காட்டிய ஆறுகளையே† கூறிச்செல்வதற்குத் தக்க காரணம் வேண்டு

* யோசனையினளவு பலபடியாக வழங்கிவருகின்றது (சீவகசிந்தாமணி. இரண்டாம்பதிப்பு. விசேடக்குறிப்பு. பக். 84 பார்க்க). மலைநாட்டு வழக்குப்படி, யோசனையொன்றுக்கு 4 நாழிகை அல்லது 6 மைலாகக் கொண்டால், 140-யோசனைக்கு 840-மைலாகும். கருவூருக்கும் பேரியாற்றங்கரைக்கும் உத்தேசம் 300-மைலே யாதலின், இது மிகவும் அதிகமேயாம். இதனால், இளங்கோவடிகள் காலத்து ஒருயோசனையினளவு 2½ மைலுக்குட்பட்டதாக இருந்ததுபோலும்.

† இந்நதிகளன்றி, அயிரை என்ற நதியும் (சிலப். 28. 145) அப்பெயரேகொண்ட மலையும் (பதிற்றுப். 21.) சேரநாட்டிலே உள்ளனவாகச் சொல்லப்படுகின்றன. இவற்றுள், அயிரையாறு, சேரர்க்குரிய கொல்லிமலையில் (அகநா. 33. 281.) உற்பத்தியாகிக் காவிரியுடன் மேலணையிற் சங்கமிக்கும் அய்யயாறு என்ற நதியாகக் கருதப்படுகிறது. இனி, அயிரிமலை என்பது, குழித்தலைக்கு மேற்கே 4½-மைலில் உள்ள இரத்தினகிரிபோலும்; இதற்கு அய்யர்மலை என்னும் பெயரும் அப்பக்கத்துவழங்குதல் காண்க. கருவூர்க்குக் கீழ்பாலுள்ள

மன்றோ? இதற்கேற்ப, வஞ்சி வஞ்சுளாரணியம் என்றபெயர் கள் முன்குறித்தபடி, ஆம்பிராவதிக் கருவூர்க்கு இன்றும் வழங்கிவருதல் அறியத்தக்கது. இவையன்றி, பழைய ரோம சக்கரவர்த்திகளாகிய அகஸ்டஸ் (Augustus) டைபீரியஸ் (Tiberius), கிளாடியஸ் (Claudius) முதலியோர் நாணயங் கள் இக்கருவூர்ப்பக்கத்தே 1806-ம் வருஷத்துக் கண்டெடுக் கப்பட்டிருப்பதாகத் தெரியவருவதும்,* இதன் பழைமை பெருமைகளை நன்கு விளக்குவதாம். கருவூர்க் கோட்டை இப்பொழுது அழிபட்ட நிலையிற் காணப்படுகின்றது.

இங்ஙனம் ஆம்பிராவதி அல்லது ஆன்பொருநைக் கரையிலுள்ள கருவூரே, சேரரது பழமை பெருமை வாய்ந்த தலைநகராயிருப்பவும், அச்செய்தியைச் சங்ககாலத்துக் குப்பிற்பட்ட தமிழ்மக்கள் முற்றும்மறந்துவிட்டனரென்றே தோற்றுகிறது. இவ்வூர்த் திருவானிலைக்† கோயிலைப்பற் றிய தேவாரப் பதிகங்களிலேனும் அக்கோயிலிற் கண்ட

செங்குத்தான இவ்வழகிய குன்றினுச்சியில் மிகப்பழைய சிவாலய மொன்று உண்டு. பதிற்றுப்பத்துக் கூறுமாறு, சேரர்களது குலதெய்வ மாக விளங்கிய கொற்றவைக்கடவுட்கு இக்குன்று முற்காலத்துச் சிறந்த தலமாயிருந்ததுபோலும். இனி, மூசிறி என்ற பெயர்கொண்ட ஊரொன்று இப்பக்கத்துள்ளதை நோக்குமிடத்து, சேரர்க்குச் சிறந்த துறைமுகமாய் மேல்கடற்பக்கத்தமைந்த முசிறியை ஞாபகப்படுத்தற்கு உண்ணூட்டில் அவ்வரசர் அதன் பெயரிட்டதுபோலத் தோற்றுகிறது. இப்பக்கத்துத் தோட்டியமுதலியவிடங்களில் மதுரைக்காளியம்மன் என்றபெயராலும் பிறவகையாலும் பிடாரிவழிபாடு பெரிதும் நிகழ்ந்து வருவதானது, பூர்வத்திற் பத்தினிவணக்கமாயிருந்ததே காலாந்தரத் தில் அங்ஙனம் மாறியதோ என்று கருதவும் இடந்தருகின்றது.

* Gazetteer of Trichinopoly. p. 260.

† திருவானிலை என்பது, கருவூர்ப் பசுபதீசுவரர் கோயிலை.

சாஸனங்களிலேனும்* வஞ்சியின் பழஞ்செய்தி சிறிதுங் குறிக்கப்பட்டிருக்கவில்லை. ஆனால், இக்கருவூரின் ஸ்தானத்தில் மலைநாட்டுக் கொடுங்கோளூர் சேரராஜதானியாகப் பின்னூல்களிற் கூறப்படுதல் காணலாம்; "சேரர்குலக் கோவீற் றிருந்து முறைபுரியுங் குலக்கோமூதூர் கொடுங்கோளூர்" என்றார் சேக்கிழாரும்.† இங்ஙனம் சேரர்தலைநகரமானது பிற்காலத்து முற்றும் மறக்கப்பட்டதற்கும் அதற்குப் பிரதியாக வேறு தலைநகரம் மலைநாட்டில் உண்டானதற்கும் தக்க காரணங்களும் உள்ளன. கருவூர், சோணாடு பாண்டிநாடுகளின் எல்லையில் அமைந்தமையால்,‡ சேரருடன் விவாதம் நேரிட்டபோதெல்லாம் தமிழ்வேந்தர்க்குள் போர்நிகழ்வதற்கு அஃது உரியகளமாயிற்று. இச்செய்தி புறநானூறு முதலிய சங்கச்செய்யுள்களால் நன்கறியப்படும். பிற்காலத்திற் சோழரது ஆதிக்கம் பெருகியபோது, கருவூர் சோணாட்டின் முக்கியநகரங்களுள் ஒன்றானசெய்தி சாஸனங்களாலும்$ நூல்களாலும் தெரிகின்றது; "அநபாயன் சீர்மரபின்

---

* இப்பசுபதீசுவரர் ஆலயத்தில், வீரராஜேந்திரன் I, இராஜேந்திரன் I, குலோத்துங்கன் III, வீரசோழன் என்ற சோழவரசர் சாஸனங்களாகக் கண்டவற்றை, சாஸனபரிசோதகர் வெளிப்படுத்தியிருக்கின்றனர். (South Indian Inscriptions. Vol. III. No. 20-26).

† சேரமான்பெருமாணாயனார் புராணம். 1.

‡ கருவூர்க்குக் கீழ்பால் 8-மைலில், காவிரிக்கரையிலுள்ள மதுக்கரையைச் சேரசோழபாண்டியநாடுகளின் எல்லையாகஇக்காலத்தாரும் கூறுவர். 'சோணாட்டின் மேற்கெல்லை கருவூர் என்பர், யாப்பருங்கலக்காரிகை உரைகாரர் (ஒழிபி. 7 உரை).

$ கி. பி. 10-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கருவூர் சோணாட்டைச் சார்ந்ததென்பர் சாஸனபரிசோதகர் (Government Epigraphist report. 1891)

மாநகரமாகுந் தொன்னெடுங் கருவூர்"(எறிபத்த.2.) "தங்கள் குல மரபின்முதற் றனிநகராங் கருவூரில்"(புகழ்ச்சோழ. 12) எனச்சேக்கிழாரும் இச்செய்திகூறுதல் காண்க. ஏறக்குறைய 900-வருஷங்கட்குமுன் சோழசக்கரவர்த்திகளாகப் பிரபலம் பெற்றிருந்த இராஜராஜன் I. அவன்மகன் இராஜேந்திரன் I காலங்களில், இக்கருவூரைச் சூழ்ந்த வெங்காலநாட்டிற்குக் கேரளாந்தகவளநாடு என்றும், இவர்களை அடுத்த குலோத்துங்க சோழன் காலத்தில் சோழகேரளமண்டலம் என்றும் பெயர்கள் வழங்கிவந்தன என்பது* கருவூர்ப் பசுபதீசுவரர் கோயிலிலுள்ள சாஸனங்களால் வெளியாகின்றது. இப்பெயர்களால், சோழராதிக்கத்துக்கு முன்பு கருவூர்ப்பிரதேசம் சேரர்க்குச் சிறந்தபூமியாகக் கருதப்பட்டிருந்தமை பெறப்படும். சோழர்க்குமுன் இம்மண்டலம் கொங்கு தேச ராஜாக்கள் ஆட்சிக்குட்பட்டிருந்ததென்றும்,† அவர்க்கும் முற்பட்ட சங்ககாலத்தேதான், அது சேரரது சிறந்த தேசமாகி வஞ்சி எனப்பட்ட இக்கருவூரை தலைமைநகரமாகக்கொண்டு விளங்கியதென்றும் அறியத்தக்கன. சங்ககாலத்துக்குப் பின்னர்ச் சோழராற்றற்கு அஞ்சிய சேரர், வஞ்சியைவிட்டுநீங்கித் தங்கட்குரிய மலைநாட்டிற் கடற்கரையிலுள்ள கொடுங்கோளூரைத் தலைமைநகரமாகக் கொள்ளலாயினர். பிற்பட்ட சேரராஜதானியாகத் தெரிகின்ற இவ்வூரைப் பழையவஞ்சி அல்லது கருவூரென்று கொள்வதற்குச்

---

* S. I. I. Vol. III. No. 30. 31.

† கருவூர், கொங்குநாட்டுத் தலங்களுள் ஒன்றுகக் கூறப்படுதல் காண்க. ஆனல், சங்ககாளிலே, கொங்குதேசம் குடகுநாடாயிருந்தமை "குடகக்கொங்கரும்" என்னும் அடிகள் வாக்கால் அறியலாம். (சிலப். 30. 159.)

சங்கநூற்பிரமாணமொன்றுமே யில்லையாதாயினும் அடியார்க்குநல்லாருள்படப் பலரும் இதனையே மாறிக்கருது வாராயினர். கொடுங்கோளூர் என்ற பெயரோ பழைய நூல்களுக்குச் சிறிதுந் தெரியாததொன்றாகும். இதனையடுத்துள்ள திருவஞ்சைக்களத்துக்கும் வஞ்சிக்கும் எவ்விதப் பொருத்தமும் இல்லாமையால், சரித்திரவறிஞர் அவ்விரண்டனையும் பொருத்தியெழுதுவனவெல்லாம் முன்னைவழக்கோடு முரணுவதேயென்க. இனிச் சிலர், சிலப்பதிகாரமணிமேகலைகளில், இக்காலத்துவழங்கும் மலைநாட்டுச்சொற்களும் வழக்குகளும் காணப்படுவதுகொண்டு, செங்குட்டுவனது தலைமைநகரும் அம்மலைநாட்டிருந்ததாகக் கருதுவர். மலைநாட்டுவழக்கென்று அவர்கள் காட்டுவனவெல்லாம் பொதுவாகப் பழைய தமிழ்வழக்குகளேயன்றி வேறில்லை. அதனால், நம் காலத்து வேறுபட்டதுபோலவே, செங்குட்டுவன் காலத்தும் அவ்வழக்குகள் வேறுபட்டிருந்தன என்று கருதுதல் பொருந்தாதெனவுணர்க. ஒருகால், சிற்சில வழக்குகள் மலைநாட்டுக்கே சிறப்புடையவாயினும், நம் சேரனுக்கு அம்மலைநாட்டினும் உரிமையுந் தலைமையுமுண்டாதலால், அதுபற்றி அவனைப்பற்றிய பாடல்களில் அவ்வழக்குகள் பயின்றன என்று கருதுதலும் இழுக்காது. இதுவரை யாம் கூறிவந்த பிரபல பிரமாணங்களால் சேரராஜதானியாகிய வஞ்சியென்பது, ஆம்பிராவதிக் கரையிலுள்ள கருவூரேயன்றிக் கொடுங்கோளூரேனும் திருவஞ்சைக்களமேனும் ஆகாவென்பதும், கனகசபையவர்கள் கருத்துப்படி, பேரியாற்றங்கரைத் திருக்கருவூரைப் பழைய வஞ்சியாகவும், அப்பேரியாற்றையே பொருநையாகவும் கொள்வதற்குப் பொருத்தமும் பிரமாணமும் இல்லையென்பதும் நன்கு விளங்கத்தக்கன.

இனி, செங்குட்டுவன் சென்றிருந்த பேரியாற்றங்கரைக்குச் சமீபித்ததும், கண்ணகி விண்ணுடு சென்றதுமான செங்குன்று* என்னும் மலையே, அச்சேரன் பத்தினிதேவிக்குக் கோயிலெடுத்துச் சிறப்பித்த இடமாகும். கண்ணகியின் உற்றூர் அவள்கோயிலை அடைந்ததையும், அவரை நோக்கி அப்பத்தினிக்கடவுள் கூறிய வார்த்தையையும் இளங்கோவடிகள் எழுதுமிடத்து:—

"வையையொரு வழிக்கொண்டு,
மாமலைமீ மிசையேறிக் கோமகடன் கோயில்புக்கு"
(சிலப். 29 உரைப்பாட்டுமடை)

"தென்வேலான் குன்றில் விளையாட்டி யானகலேன்
என்னோடுந் தோழிமீ ரெல்லாரும் வம்மெல்லாம்"
(ஷை. ஷை.)

என முறையே கூறுதலால், பத்தினிக்கோயில் கருவூர்க்கு வெகுதூரத்தில் மலைமேலமைந்திருந்தமை புலப்படும். அன்றியும், பத்தினிப் பிரதிஷ்டைக்குரிய முற்காரியங்களைச் செங்குட்டுவன் வஞ்சியிலிருந்தே செய்துவந்தவனென்ப,

"சிறப்புடைக் கம்மியர் தம்மொடுஞ் சென்று
பால்பெற வகுத்த பத்தினிக் கோட்டத்து
கடவுண் மங்கலஞ் செய்கென ஏவினன்"
(சிலப். 28—223, 225, 233)

---

* கண்ணகி சுவர்க்கம்புக்க மலை, செங்கோடு என்பது, அரும்பதவுரையாசிரியர் கருத்து (சிலப். அரும்பத. பக். 74); அடியார்க்கு நல்லார், அவரெழுதிய செங்கோடென்பது இப்போது சேலம் ஜில்லாவைச்சேர்ந்த திருச்செங்கோடாகக் கருதி, அவ்வூர் கண்ணகி விண்ணுடு சென்ற இடமாகாதென்றும், செங்குட்டுவன் சென்றிருந்த பேரியாற்றங்கரையை அடுத்த செங்குன்றே அவ்விடமாதல் வேண்டும் என்றும் எழுதினர் (சிலப். பதிகம். 3 உரை).

என்னும் அடிகளது வாக்கின்போக்கால் அறியப்படுகிறது. மணிபல்லவத்தினின்று புறப்பட்ட மணிமேகலையும் முதலில் இச்செங்குன்றையடைந்து, தன் தாயாகிய அப் பத்தினியை ஆங்குத் தரிசித்தபின்பே வஞ்சிநோக்கிச் சென்றனளென உணர்க.* இச்செங்குன்று இப்போது சேங்குன்றூர் என்னும் பெயருடன் மலைநாட்டில் † உள்ளது. இவ்வூரிலுள்ள குன்றின்மேல் மிகப்பிரபலம்பெற்ற பகவதிகோயிலொன்று உண்டு. இத்தேவிக்குத் திருவிழா முதலியவை பெருஞ் சிறப்புடன் நடைபெறுகின்றன. இப்பகவதியை மதுரை மீனாக்ஷியம்மனாக அப்பக்கத்தார் இன்றும் வழங்கிவருவதாகத்தெரிதல் ஆராயத்தக்கதேயாம்.

---

* மணிமேகலை 25-ம் காதை முடிவும், 26-ம் காதை முதலுங் காண்க.

† செங்குன்றூர், மலைநாட்டில் அகலப்புழைக்குத் தென்கிழக்கிலும் கோட்டயத்துக்குத் தெற்கிலும், உத்தேசம் 20-மைல் தூரத்துள்ளது.

## 11-ம் அதி:—

# செங்குட்டுவன் அரசியல்.

நம் சேரர்பெருமானது இராஜாங்கமுறைகளை இனி நோக்குவோம். பொதுவாகச் சொல்லுமிடத்து, செங்குட்டுவன் காலத்தனவாகிய சங்கநூல்களிலே அரசியன்முறைகளாக அமைந்தவை யாவும் நம் வேந்தனுக்கும் உரியவையென்றே சொல்லலாம். இவ்வாறு கூறப்பட்ட அரசியல்களை விடாது இங்கு விவரிப்பதாயின் இவ்வதிகாரம் அளவு கடந்து விடும். அதனால், வேற்று நூல்களுட் புகாமல், செங்குட்டுவன் சம்பந்தமான செய்யுள்களிலிருந்து தெரியவரும் விசேடச்செய்திகளை மட்டும் இங்கு விளக்குவோம்.

நம் சேரர்பெருந்தகை, சங்ககாலத்துத் தமிழ் வேந்தருள்ளே சிறந்து விளங்கியவன். இவன் தந்தை நெடுஞ்சேரலாதனும், அவன் முன்னோரும், வடவாரியருடனும் அயலரசருடனும் அடுத்தடுத்துப் போர்புரிந்து வந்தவராதலால், அவரது பகைமையெல்லாம் இவனுக்கும் இருந்ததென்றே தெரிகின்றது. அதனால், கடல்வழியாகவும் தரைவழியாகவும் பகைவர் பிரவேசிப்பதைத் தடுப்பதற்கேற்ற கப்பற்படையும் தரைப்படையும் இவன் உடையனாகவேயிருந்தான்.

> " சினமிகு தானை வானவன் குடகடற்
> பொலந்தரு நாவா யோட்டிய வவ்வழிப்
> பிறர்கலஞ் செல்கலா தனையேம் " (புறநா. 126.)

என, மரக்கலப்படையின் மாட்சியால் கடற்றலைமையை அக்காலத்துச்செங்குட்டுவன் வகித்திருந்த சிறப்பைப் பெயர்

கூறுது வியந்தனர் ஒரு புலவர். கடற் படையைக் கொண்டு இவன் ஒருகாலத்துச் செய்த வீரச்செயலையும், அதுபற்றி இவன் "கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன்" என வழங்கப்பட்டதையும் இவனது "போர்ச்செயல்கள்" கூறியவிடத்தே விளக்கினோம்: இவ்வேந்தனது தரைப்படையும் அங்ஙனமே அளவாலும் ஆற்றலாலும் மேம்பட்டிருந்தது. பத்தினிக்குப் படிமச்சிலை எடுத்தற்கும், ஆரியரை வெற்றிகொள்வதற்குமாக இவன் வடக்கே சென்றுவந்த மூப்பத்திரண்டுமாதம்வரை இவனாட்டிற் குழப்பமொன்றும் இல்லாதிருந்ததோடு, குடிகளெலலாம் இவனாட்சியில் மகிழ்ச்சிமிக்கவர்களாய்த் தம் அரசன்வெற்றியைத் தமக்குரிய பெருமையாகவேகொண்டு விளங்கினர் என்றுந்தெரிகிறது.*

செங்குட்டுவனது அரசியலில், முற்காலமுறைப்படி, அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தூதுவர், சாரணர் என்ற ஐவருமே சிறந்திருந்தவர்கள். இவர்களை அரசர்க்குரிய ஐம்பெருங்குழு என்பர் முன்னோர்.† இவர்களன்றிக் கருமவினைஞர், கணக்கியல் வினைஞர், தருமவினைஞர், தந்திரவினைஞர், பெருங்கணி என்ற அரசியல்வகிக்குந் தலைவரும் இருந்தனர்.‡ கருமவினைஞர் என்போர் தேசத்தின் ஆட்சியை நடத்துவோரென்றும், கணக்கியல்வினைஞர் என்போர் தேசத்தின் வரிவருவாய்களைக் கவனிக்கும் அதிகாரிகளென்றும், தருமவினைஞர் நாட்டினறங்களைப் பாதுகாப்போரென்றும், தந்திரவினைஞராவார் படைகளின் சம்பந்தமான தலைமைவகிப்போர் என்றும், பெருங்கணி அரசனது

* இந்நூல், 74—5-ம் பக்கம். † ஷை. 58-ம் பக்கக் கீழ்க்குறிப்பு. ‡ சிலப். 26. 40—1.

காரியங்கட்குரிய காலங்களையும் நிமித்தங்களையும் கணித் துரைப்போன் என்றுந் தெரிகின்றன. இவரெல்லாம், அரச னது மந்திராலோசனைக்கு உரியவராவர். செங்குட்டுவனது தரைப்படைக்குத் தலைமைவகித்தவீரன் வில்லவன்கோதை என்பான். இவனே செங்குட்டுவனது வடயாத்திரையில் அவனுடைய சேனைகளை நடத்திச்சென்று ஆரியவரசருடன் நிகழ்ந்த பெரும்போரில் வெற்றிபெற்றவன். "வில்லவன் கோதையொடு வென்று வினைமுடித்த-பல்வேற் றானைப் படை" என்றார், இளங்கோவடிகளும்*. இவனைப்போலவே, தேசவருவாயின் தலைமையைவகித்த அமைச்சன், அழும்பில் வேள்† என்பவன்; இவன் அழும்பில் எனப்படும் வளம் பெருத்த நாட்டின் தலைவன்; இவனுக்கு 'வானவிறல்வேள்' என்ற பெயரும் வழங்கியது.‡ இவ்வமைச்சன் செங்குட்டு வற்குச் சமயோசிதமாகச் சூழ்ச்சியுரைக்க வல்லனாயிருந் தான்.$ இனி, நம் வேந்தனது தூதுவருள்ளே தலைமை வகித்தவன் சஞ்சயன் என்றும்,¶ இவனுக்கு அடுத்தபடியி லிருந்தவன் நீலனென்றும் § தெரிகின்றன. இவர்களிட முடங்கிய தூதுவரெல்லாம் தம்மரசனிடமிருந்து வேற்றரச ரிடம் சமாசாரங்களைத் தெரிவித்து வருதற்குரியர்; அன்றியும்

---

* சிலப். 26. 251—2.

† சிலப். 28. 204—5. ‡ "வான விறல்வேள், அழும்பி லன்ன நாடிழந் தன்றும்" என்பது மதுரைக்காஞ்சி (344—5). சேரன் படைத்தலைவனாகிய நன்னனுக்கும் இப்பெயரே வழங்கப்பட்டுளது. இதனால், சேரரது அரசியலில் தலைமைவகித்த ஒரு சாரார்க்கு இப் பெயர் வழங்கிவந்ததாகக் கருதப்படுகிறது. (யாம் எழுதிய வேளிர் வரலாறு; 67-ம் பக்கம் பார்க்க.)

$ சிலப். 25. 173—7. ¶ ஷை. 26. 137. § ஷை. 28. 109.

யுத்தத்திற்கு அரசனுடன்சென்று வேண்டியகாரியங்களை நிர்வகிக்கவும் வல்லவர். இன்னோர் இராஜசமுகங்கட்கு அடுத்தடுத்துச் சென்றுவருபவராதலால், சட்டையும் தலைப் பாகையுந் தரித்திருப்பர். இவரைக் கஞ்சுகமுதல்வர் எனவும் வழங்குவர்; "சஞ்சயன் முதலாத் தலைக்கீடு பெற்ற-கஞ் சுக முதல்வ ரீரைஞ் ஞூற்றுவர்" எனத் தம் தமையனுக்கி ருந்த தூதுவரைப்பற்றி இளங்கோவடிகள் குறித்தல் காண்க.* இனிச் சாரணரென்போர் ஒற்றராவார். இன் னோர், இக்காலத்துப்போலவே, முற்காலத்தும் அரசர்க்குக் கண்போன்று விளங்கினர். செங்குட்டுவனுடைய ஒற்றர் கள் அந்நியநாடெங்கும் சஞ்சரித்து வந்தனரென்றும், அவ் வாறே வேற்றரசரொற்றர்களும் பெருவீரனான நம் சேரன் நாட்செய்திகளைத் தெரிதற்பொருட்டு வஞ்சிமாநகரில் மறைந்து வசித்தனரென்றும் சொல்லப்பட்டுள்ளன.† மேற் கூறியவர்களன்றிக் கரணத்தியலவர் (கணக்கர்), கருமவிதிகள் (ஆணைநிறைவேற்றும் அதிகாரிகள்), கனகச்சுற்றம் (பண் டாரம் வகிப்போர்), கடைகாப்பாளர் (அரண்மனை காவலர்), நகரமாந்தர், படைத்தலைவர், யானைவீரர், குதிரைவீரர் எனப்பட்ட எண்பேராயத்தாரும் செங்குட்டுவன் அரசியலில் தலைமைபூண்டிருந்தனர்.‡

செங்குட்டுவனது அரசியல்முத்திரையானது வில், கயல், புலி என்னும் மூன்றும் அமைந்ததோர் இலாஞ்சனை யாகும். இதனைத் "தென்றமிழ் நாட்டுச் செழுவிற் கயற் புலி, மண்டலை யேற்ற வரைக" என்பதனால் அறிக.§

* சிலப். 26. 137—8. † ஷை. 25. 173—6. ‡ ஷை. 26. 38.
§ ஷை. 25. 171—2.

சோழபாண்டியர் அடையாளங்களாகிய புலியையும் மீனையும் தனக்குரிய வில்லொடுசேர்த்து நம்சேரன் இலச்சினையாகக் கொண்டிருந்ததை நோக்குமிடத்து, அக்காலத்துத் தமிழ் வேந்தருள் இவனே தலைமை வகித்தவனென்பது புலப்படு கின்றது. இவ்வாறே, இவ்வேந்தன் சோழபாண்டியர்க்கும் மேம்பட்டவன் என இளங்கோவடிகள் பலமுறை கூறுவர்.*

செங்குட்டுவனது தலைமையதிகாரிகளும், அந்தணர் புலவர் குடிகளும் அவனிடம்வந்து ஒன்று கூறும்போது, பேச்சின் தொடக்கத்தும் முடிவிலும் " அரசே! வாழ்க " என்று அவனை வாழ்த்துதல் பழைய முறையாக இருந்த தென்பது இளங்கோவடிகள் வாக்கால் நெடுகவும் உணரப் படுகின்றது. இதனை, "வடநாட்டியாத்திரை" "பத்தினிக் கடவுளைப் பிரதிஷ்டித்தல்" என்ற அதிகாரங்களைக் கொண்டு அறியலாகும்.

செங்குட்டுவன் திருமுகமெழுதுவோர் 'கண்ணெழுத் தாளர்' எனப்படுவர்; "கண்ணெழுத் தாளர் காவல் வேந்தன், மண்ணுடைமுடங்கலம் மன்னவர்க்களித்து"எனக் காண்க.† கண்ணெழுத்து என்பது சங்கநாளில் வழங்கிய தமிழெழுத் தின் பழையபெயராகத் தோற்றுகிறது. செங்குட்டுவனது வடயாத்திரையில் பண்டங்கள் ஏற்றிச்சென்ற வண்டிகள் இன்னின்ன சரக்குடையவை என்றெழுதப்பட்டிருந்தன என் பதை அடிகள் கூறுமிடத்து, "இருபதினாயிரங் - கண்ணெ ழுத்துப் படுத்தன கைபுனை சகடமும்"‡ என்கிறார்; இதனா னும் கண்ணெழுத்து, பண்டைத்தமிழெழுத்தின் பெயரே

*சிலப். 25. 87—90; 26. 168—71. † ஷை. 26. 170—1.
‡ ஷை. 26. 136; 5. 112.

யாதல் காணலாம். இங்ஙனமாயின், சாஸன பரிசோதகரால் வட்டெழுத்து எனப்படும் பழைய தமிழெழுத்தைச் செங்குட்டுவன்காலத்துக் கண்ணெழுத்தாகக்கொள்ளல் பொருந்தும் போலும். பழையதமிழெழுத்தாய்ச் சாஸனங்களில் மட்டும் காணப்படும் வட்டெழுத்து நம்நாட்டில் வழக்குவீழ்ந்து பல நூற்றாண்டுகளாயினும், மலைநாட்டுள்ள சோனகர்க்குள் கோலெழுத்து என்று வழங்கப்பட்டு இன்றும் அது வழங்குகின்றதென்பர்.* கண்போன்றிருத்தலாற் கண்ணெழுத்து என்றும், வட்டமாகவிருத்தலின் வட்டெழுத்து என்றும், சித்திரித்தெழுதப்படுதலாற் கோலெழுத்து என்றும் ஒன்றே பல பெயர் பெற்றதென்க. இனி, ஸ்ரீமாந்-கோபிநாதராயரவர்கள், இதுவரைகண்ட சாஸனங்களுள்ளே பழமைவாய்ந்த தமிழ்ச்சாஸனமொன்றைச் செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிட்டிருக்கின்றனர்.† செஞ்சிக்கடுத்த திருநாதர் குன்றப் பாறையில் வெட்டப்பட்ட அச்சாஸனம், ஜைந ஆசிரியரொருவர் ஐம்பத்தேழுநாள் அநசநவிரதம் (உண்ணாநோன்பு) பூண்டு உயிர்துறந்த செய்தியைக் குறிப்பது. அடுத்த பக்கத்துக்கண்ட அத்தமிழ்ச்சாஸனம் வட்டெழுத்துமுறையினின்றும் சிறிது மாறியுள்ளதென்பது இராயரவர்கள் கொள்கை; ஆயினும் அதன் தமிழெழுத்துக்கள், ஏறக்குறையச் செங்குட்டுவன் காலத்து வழங்கியவை என்பது அவர்களெழுதிய குறிப்பால் அறியப்படுதலால், அத் தமிழெழுத்தின் மாதிரிகையை நம்மவர் அறிந்துகொள்ளுமாறு அச்சாஸனத்தையே தருகின்றேம்.

---

* Dr. Gundert's Malayalam Grammar (art).

† தொகுதி-5, பக்-410—1.

சாஸனம்.

1. ஐம்பத்தேழன—
2. சனந்நோற்ற
3. சந்திராநந்தி ஆ—
4. சிரீகர் நிசீதிகை.

செங்குட்டுவன் அத்தாணிமண்டபத்தை யடைந்து அமைச்சர் முதலியவருடன் மந்திராலோசனை புரியும்போது, அவனுடைய கோப்பெருந்தேவியும் (இளங்கோவேண்மாள்) கூடவீற்றிருந்து தன்னபிப்பிராயத்தையும் தடையின்றி வெளியிடற்கு உரியவளாயிருந்தனள்.* அரசன் தன் பெருந்தேவியுடன் அத்தாணிக்குவரும் மத்தியிலே அரண்மனையிலுள்ள அரங்குகளிற் கூத்தர்கள் நிகழ்த்தும் அழகிய ஆட்டங்களைக் கண்டு மகிழ்வதுமுண்டு. செங்குட்டுவனது ஆஸ்தானக்

* சிலப். 25. 107—114; 28. 65—6.

கூத்தரிற் சாக்கையர் என்போர் சிறந்தவராகக் காணப்படு கின்றனர்*. இச் சாக்கையர் என்ற கூத்தவகுப்பார் மலை நாடுகளில் தம் பூர்வவிருத்தியையே இன்றும் நடத்திவருதல் அறியத்தக்கது.†

நம் சேரர்பெருமானுக்கு அடங்கியிருந்த அரசர்கள் தத்தம் திறைகளைக்கொண்டுவந்து தலைநகர்ப் பெரியபண்டா ரத்திற் சேர்க்குங்காலம் விடியற்காலையாகும். அங்ஙனம் திறைகொணரும்படி அரண்மனையுள் முரசம் அறையப்பட்டு வந்ததென்று தெரிகிறது ; "ஞாலங் காவலர் நாட்டிறை பயி ரும், காலை முரசங் கடைமுகத் தெழுதலும்" எனக் காண்க.‡

அரசனது பிறந்த நாளானது நகரத்தாரால் ஆண்டு தோறும் ஒரு புண்ணிய தினமாகக்கருதிக் கொண்டாடப் படும்.$. இப்பிறந்தநாள் பெருநாள்¶ எனவும் பெருமங்கலம் எனவும் வழங்கும். இக்காலத்தே, அரசன் உயிர்களி டங் காட்டுங் கருணைக்குறிகுறியாக மங்கல வண்ணமாகிய வெள்ளணி அணிந்து, சிறைப்பட்டவரையெல்லாம் விடுவிப் பதும், இரவலர்க்கும் புலவர்க்கும் வேண்டியவாறு அளிப் பதும், தன் தானைவீரர்களைத் தக்கபடி கௌரவிப்பதும் மர பாகும். இதனையே தொல்காப்பியனாரும் "சிறந்த நாளணி செற்ற நீக்கிப்—பிறந்த நாள்வயிற் பெருமங்கலமும்" என்று

---

* சிலப். 28. 65—79; † இச்சாக்கையர் வரலாற்றை ஸ்ரீ. T. K. கோபால பணிக்கர் எழுதிய "மலையாளமும் அதில் வாழ்நரும்" (Malabar and its folk) என்ற ஆங்கிலநூலின் 184, 185-ம் பக்கங் களிலும், செந்தமிழ் 7-ம் தொகுதி, முதற்பகுதியில் யாமெழுதிய 'மூன்று தமிழ்க்குடிகள்' என்ற வியாசத்திலும் கண்டுகொள்க.

‡ சிலப். 26. 52—3. $ மணிமே. 28. 9. ¶ சிலப். 27. 44.

சிறப்பிப்பர்.* இக்காலத்தே, நகரத்தாரெல்லாம் உற்சாக மிக்கவர்களாய்த் துருத்தி முதலியவற்றால் நீர்கொண்டு இறைத்து விளையாடி மகிழ்வர். மணிமேகலை மணிபல்லவத்தி னின்று வஞ்சிநகர் புகுந்தபோது, செங்குட்டுவன் பிறந்த நாள் கொண்டாடப்பட்டதென்று தெரிகின்றது. இக்காலத் தும், திருவனந்தபுர அரசர்க்குள் ஜன்மதினக் கொண்டாட் டம் சிறப்பாகவே நடைபெறுதலோடு, அவ்வரசர் 'மூலந் திருநாள், விசாகந்திருநாள்' எனத் தங்கள் பிறந்தநாள்களை யே பெயராகக்கொண்டு விளங்குதலும் கண்டுகொள்க.

விசேட நாள்களிலே, அரசன் ஒருதட்டிற் பொன்னும், ஒருதட்டிற் றானுமாகத் துலையிலேறித் தன்னை நிறுத்து அந்நிறுத்த பொன்னை மறையவர்க்குத் தானஞ்செய்தல் மர பாகும். செங்குட்டுவன் கங்கைக் கரையிலே பத்தினிப்படி மத்தை நீராட்டித் தூய்மைசெய்தபின்னர், மாடலன் என்னும் அந்தணனுக்கு மேற்கூறியபடி தானஞ்செய்தான் என்று அடிகள் கூறுவர்.† இவ்வாறு "துலாபாரதானம்" செய்வது மலைநாட்டரசர்க்குள் இன்றும் நடைபெற்றுவரும் வழக்க மென்பது யாவரும் நன்கறிந்தது.

அரசன் மலைப்பிரதேசங்கட்குச் செல்லும்போது, அம் மலைவாணராகிய குன்றக்குறவர் தம் நாட்டிற் கிடைக்கக் கூடிய அரும்பொருள்களைச்சேகரித்து அவற்றைத் தலைமேற் சுமந்துகொண்டு கூட்டமாகவந்து அரசனை அடிபணிந்து அவன் திருமுன்பு காணிக்கை வைப்பர்.‡ இம்மரியாதை

* தொல். பொருளதி. 91. † சிலப். 27. 175—6.
‡ சிலப். 25. 35—56; இந்நூல். பக். 50—51.

திருவனந்தபுரம் கொச்சி முதலிய மலைநாட்டரசர்களுக்கு இன்றும் நடந்துவருவதொன்றாகும். அப்போது மலைநாட்டுக் கூத்தர்கள் வந்து தங்களாட்டத்தால் அரசனை மகிழ்விப்பதும் அவர்கட்கெல்லாம் ஆஸ்தானத் தலைமைகூத்தன் கூறிய முறையே அரசன் பரிசளிப்பதும் பூர்வ வழக்கம்.*

அரசன் யுத்தயாத்திரையாகப் புறப்படுமுன்னர்த் தன் படைத்தலைவர்க்கும் சேனைகட்கும் பெருவிருந்து செய்து அவர்களை மகிழ்விப்பதும் வழக்கமாம்: இதனைப் 'பெருஞ்சோற்றுநிலை' என்பர் தொல்காப்பியர். † "வேந்தன் போர் தலைக்கொண்ட பிற்றைஞான்று போர்குறித்த படையாளருந் தானும் உடனுண்பான்போலவந்து ஒருமுகமன் செய்தற்குத் தானே பிண்டித்துவைத்த உண்டியைக் கொடுத்தல்' என்பர் நச்சினார்க்கினியர்.

அரசன் யுத்தத்திற்காக யாத்திரைசெய்ய நேரும்பொழுது, குறித்த நன்முகூர்த்தத்தில் தான் பிரயாணஞ்செய்ய இயலாதாயின், தன் வெற்றிவாளையும் கொற்றக்குடையையும் யானைமேலேற்றி மிக்கஆடம்பரத்துடன் கோட்டைக்கு முதலிற் 'பரஸ்தானம்' செய்துவைப்பது தமிழ் வேந்தரது பண்டை மரபாகும்.‡ இதனை நாட்கோள் என்பர் தொல்காப்பியனார்.§ இதன் பின்பே, அலங்கரிக்கப்பட்ட அரசுவாவின் மேல் அரசன் ஆரோகணித்துப் பிரயாணமாவன். இங்ஙனம் புறப்படும்போது, சிவபிரான் திருமால்முதலிய தெய்வங்களின் பிரசாதங்களை வணங்கிப் பெற்றுக்கொண்டும், நான்

---

* சிலப். 26. 125—6. † தொல். பொருளதி. 63; பக். 130.
‡ ஷை. ஷை. 33—45. § ஷை. ஷை. 68.

மறையோர் வளர்க்கும் நித்தியாக்கினிகளை நமஸ்கரித்தும் செல்வது வழக்கமாகும்.*

இங்ஙனமாக அரசன் யாத்திரைசெல்லுங் காட்சி மிக்க ஆடம்பரமும் அழகும் வாய்ந்ததாம்: வழிநெடுகவும், நாடகக்கணிகையரும், சூதர் மாகதர் வேதாளிகரும், யானை குதிரை காலாள்வீரர்களும் தம்மரசனை மனமாரவாழ்த்திப் பெரிதும் ஆனந்திப்பர். இவ்வாறு செல்லுகின்ற அரசனுடன், நால்வகைச் சேனைகள்மட்டுமன்றி, நாடகமகளிரும், நகைவிளைத்து மகிழச்செய்யும் வேழம்பர் என்போரும், வாத்தியம் வாசிப்போரும் உடன்செல்வது முண்டு. செங்குட்டுவனது வடயாத்திரையிற்சென்ற அளவற்ற காலாட்படையுடன் அடியிற் குறித்த சேனைகளும் பரிவாரங்களுஞ் சென்றன என்று இளங்கோவடிகள் கூறுவர்.†

| | | | |
|---|---|---|---|
| நாடகமகளிர் | 52 | யானை | 500 |
| குயிலுவர் (வாத்தியகாரர்) | 208 | குதிரை | 10000 |
| நகைவேழம்பர் | 100 | பண்டங்களேற்றிய வண்டிகள் | 20000 |
| தேர் | 100 | சட்டையிட்ட அதிகாரிகள் | 1000 |

இன்னின்ன சரக்குடையது என்றெழுதப்பட்ட பண்டங்களேற்றிய சகடங்கள் இருபதினாயிரமும், அவற்றைக் கண்காணிக்கும் அதிகாரிகள் தொகை ஆயிரமுமாயின், நம் வேந்தனுடன் சென்ற காலாட்படையினளவு கணக்கிறந்தது என்பது சொல்லவும் வேண்டுமோ? இளங்கோவடிகளும்,

* இந்நூல். பக். 59. † சிலப். 26. 128—140.

இச்சேனைப்பெருக்கை வரையறுக்கவியலாமல், "தண்டத் தலைவருந் தலைத்தார்ச் சேனையும், வெண்டலைப் புணரியின் விளிம்புசூழ் போத, மலைமுதுகு நெளிய நிலைநா டதர்பட, உலக மன்னவன்" சென்றான் என்றார்.* யாத்திரையிற்சேனைகட்குத் தளர்ச்சியுண்டாகாது உள்ளக்கிளர்ச்சியடையுமாறு நாடகமகளிரும், நகைவேழம்பரும், குயிலுவரும் தங்கள் ஆடல் பாடலழகுகளாலும், விநோதப் பேச்சாலும், வாத்திய இசைகளாலும் மகிழ்ச்சிவிளைத்தற்கு உடன்செல்வது பண்டைமரபென்பது இதனால் விளக்கமாகும்.

செங்குட்டுவன்காலத்து நடந்த யுத்தமுறைமையானது தொல்காப்பியமுதலிய முன்னூல்களிற் கண்ட புறத்துறைகட்கும், பழைய தமிழ்வழக்குகட்கும் ஒத்ததாகவே புலப்படுகின்றது. எனவே, செங்குட்டுவன் காலம்வரை அத்தொல்காப்பியமரபுகள் சிதைந்தனவல்லவென்பது பெறப்படும். அம்முறைகளையெல்லாம் இங்கு விவரிப்பதாயிற் பெருகும்; இளங்கோவடிகளது வஞ்சிக்காண்டத்தைக்கொண்டு அறிக.

போரில் அரசன் வெற்றியடைந்தபின்னர், விழுப்புண் பட்டு இறவாதிருந்த வீரர்களையும், வீரசுவர்க்கம் பெற்ற சூரர்களுடைய மைந்தர்களையும் தன் ஆஸ்தானத்தில் அழைத்து அவர்களையெல்லாம் பெரிதும் அபிமானித்து ஊக்குதல் பழைய மரபாயிருந்தது. நம் வேந்தர்பெருந்தகை, கங்கைக்கரையில் அமைக்கப்பட்ட பாடியிற் பேரோலக்கமாக வீற்றிருந்து, மேற்குறித்த வீரர்க்கெல்லாம் பொன்னாலாகிய வாகைப்பூக்களைச் சூட்டிப்புகழ்ந்து அவர்களை உற்சாகப்

---

* சிலப். 26. 80—83.

படுத்திய செய்தியை இளங்கோவடிகள் அழகுபெறக் கூறு தல் அறிந்து மகிழத்தக்கது.* இக்காலத்து நம்மையாளும் அரசாங்கத்தாரும் போரிற் பெருந்திறல் காட்டும் வீரசிகா மணிகட்குப் பட்டமும் பதக்கமும் (Victoria Cross) அளித் துப்பாராட்டிவரும் முறையானது, பழைய தமிழ்வேந்தராற் கைக்கொள்ளப்பட்டதொன்றே என்பதையறிய நம்மவரில் யார்தாம் மகிழார்? இவ்வளவோ? போரிற் பகைவரை வென்றுகவர்ந்த பொருள்கள் எத்துணை அருமையும் பெரு மையும் உடையவையாயினும், அவற்றைத் தம் வீரர்களுக் கும், போர்க்களம்பாடும் புலவர்க்கும், மற்ற இரவலர்க்கும் வேண்டிய வேண்டியாங்கு அளித்துமகிழ்வதும் பண்டை அரசர்கொண்ட ஒழுக்கமாகவுந்தெரிகின்றது. செங்குட்டுவன் தந்தை இங்ஙனமே "நன்னகர் மாந்தை முற்றத் தொன்னூர்-பணிதிறை தந்த பாடுசால் நன்கல"ங்களை வேண்டியவர்க்கு அளித்தானென்று மாமூலனாரும், † அச்சேரலாதன் மக னான செங்குட்டுவன் "பெரிய வாயினு மமரகத்துப் பெற்ற-தரியவென்னாது ஓம்பாது வீசி"னானென்று பரணரும்‡ கூறி யிருத்தல் குறிப்பிடத்தக்கது.

போரில் தம் பெருந்திறமையைக் காட்டி இறந்த வீரர்க்கு வீரக்கல் என்ற நடுகல் நாட்டி அவரைக் கௌர விக்குமுறை தொல்காப்பிய முதலிய முன்னூல்களில் விளங் கக் கூறப்பட்டுள்ளது.$ ஆனால், தம் கணவருடன் உயிர் நீத்த பத்தினிகளுக்கு அவ்வாறு கல்லமைத்துக் கௌரவிக் கும் வழக்கை அந்நூல்களிற் காணுதல் அரிதாம். ஆயினும்,

* சிலப். 27. 23—44. † அகநானூறு. 127.
‡ பதிற்றுப்பத்து. 44. $ தொல். பொருளதி. 60.

செங்குட்டுவன் காலத்தே கற்பின்மாட்சியை நிறுவிய பத்தினிகளிடம் தெய்வபாவனை வைத்து—வீரர்க்குச்செய்வது போலக்—கற்காண்டலும், கல்லெடுத்தலும், அதனை நீர்ப்படுத்துத் தூய்மைசெய்தலும், பிரதிஷ்டித்தலும், வாழ்த்துதலும் பெருமரபாயிருந்தன என்பது மேற்குறித்த வஞ்சிக்காண்டப் பகுதிகளால் நன்கறியப்படும். கண்ணகியின் கற்பினை வீரக்கற்பு அல்லது மறக்கற்பு என்றும், அவளை வீரபத்தினி யென்றும் *அடிகள் கூறியதற்கேற்ப, வீரர்க்குரியதாக நடைபெற்றுவந்த நடுகல்வழக்கத்தைக் கண்ணகிமுதலியோர்க்கும் பண்டையோர் கொண்டனர் போலும். இவ்வாறு வீரசுவர்க்கம்பெற்ற சூரர்கட்குமட்டுமன்றி, சககமனஞ்செய்த பத்தினிகட்கும் கல்நாட்டிவந்த வழக்கமானது, பிற்காலத்தே பிரபலமாகவிருந்த தென்பது, தென்னாட்டின் பலபாகங்களிலும் அத்தகைய வீரக்கற்களும் ஸதிகற்களும் விசேடமாகக் காணப்படுதலால் விசதமாகின்றது. பிற்கூறிய ஸதிகல்லை மாஸ்திகல் என்பர் கன்னடநாட்டார். [இது மஹாஸதி கல் என்பதன் மரூஉ] ஸ்ரீமாந்-கோபிநாதராயரவர்கள் செந்தமிழ்ப் பத்திரிகையில் எழுதிய சிறந்த ஆராய்ச்சியுரையொன்றில் அவ்விருவகைக் கற்களின் மாதிரிகைகளாகக் காட்டிய படங்களை அடுத்த பக்கங்களிற் கண்டுகொள்க.

பண்டையரசர்கள் மேற்கூறியவாறு வீரபத்தினிகளைச் சிறப்பித்தற்குரியசிலைகளை இமயம்பொதியம்போன்ற பெரிய பர்வதங்களினின்றும் எடுத்துவருதலும், அவ்வெடுத்தவற்றைக் கங்கைகாவிரிபோன்ற புண்ணியநதிகளில் நீராட்டித் தூய்மை செய்வித்தலும், அம்முயற்சியில் இடையூறு

* 'ஆரஞருற்ற வீரபத்தினி' (பதிகம்).

விளைக்கும் பகையரசரை அடக்கிமீளுதலும் வழக்கமென்பது, செங்குட்டுவன் செய்திகளினின்றுந் தெரியலாம்.

பண்டைத் தமிழ்வேந்தரது அரசியலுரிமை, பொதுவாக, மக்கட்டாயமாய் ஜேஷ்டாநுக்கிரமமாக வந்ததேயாகும். அம்மானுரிமை மருமகனுக்கு வரும் மருமக்கட்டாயம் செங்குட்டுவன்போன்ற சேரர்காலத்து வழங்கியதேயன்று. சரித்திரவறிஞர் சிலர், நம் சேரன்காலத்தில் மருமக்கட்டாயமே வழங்கியதாகக்கொண்டு, அக் கொள்கைக்கேற்பப் பழைய பாடங்களைத் திருத்திச் செல்வர். சேரலாதனை இளங்கோவடிகட்கு மாமன் என்ற முறையிற் கூறாது, தந்தையென்ற முறையில் வைத்து "நுந்தை தாணிழலிருந்தோய்"* எனத் தேவந்தி அவ்வடிகளை அழைத்திருப்பதும், சேரவரசுக்குரியவர்களை, மருகரென்னாது புதல்வர் என்னுமுறையிற் பதிற்றுப்பத்துக் கூறுதலும் (70, 74.) அவர்கொள்கைக்கு முழுவிரோதமாதலோடு, முன்னூல்வழக்கே யின்மையாலும் அது பொருந்தாதெனை உணர்க.

நம் சேரர்பெருமானது மற்ற அரசியலடையாளங்கள், சேரர்க்குப் பொதுவாக நூல்களிற்கண்டனவெல்லாம் அமையும். முக்கியமாக, செங்குட்டுவன் முன்னோர் 'எழுமுடி' என்று பெயர்பெற்ற மாலையொன்று உடையராயிருந்தனர் எனப்படுகின்றது†. செங்குட்டுவனும் அதனை அணிந்திருந்தவன் என்பது "எழுமுடி மார்ப"‡ என்னும் இளங்கோவடிகள் வாக்கால் தெரியலாம். அரசரெழுவரைச் சேரர் முன்னோர் வென்று, அவ்வெற்றிக் கறிகுறியாக அவரது எழுமுடிபோலச் செய்யப்பட்ட மாலையை அணிந்துவந்தவராதலால், அஃது அப்பெயர்பெற்றதென்பர்§.

---

* சிலப். 30. 174. † பதிற்றுப். 14, 16, 40, 45.

‡ ஷை. 28. 169. § ஷை. 14. உரை.



மாஸ்திகல் அல்லது பத்தினிக்கல்.

## 12-ம் அதி:—

# செங்குட்டுவன் குணதிசயங்கள்.



சேரன்-செங்குட்டுவன் இந்நிலவுலகில் ஐம்பத்தைந்து வருஷம் வீற்றிருந்தவனென்பது, பதிற்றுப்பத்துள் இவனைப்பற்றிய பதிகவாக்கியத்தால் அறியப்படுகின்றது. இவன் தந்தை நெடுஞ்சேரலாதன் தன் மக்களது இளமைக்காலத்து இறந்தவனென்று தெரிதலால், 20-ம் வயதிற் செங்குட்டுவன் பட்டமெய்தியவனாயினும், குறைந்தது 35-வருஷம் இவன் ஆட்சிபுரிந்தவனாதல் வேண்டும். இவ்வரசன் இரண்டாம் முறையாகச் சென்ற வடயாத்திரையில் 32-மாதங்கள் செலவிட்டனனென்றும்,* அவ் யாத்திரை முடித்துக்கொண்டு வஞ்சிமாநகரம் புகுந்தபோது இவனுக்கு 50-ம் வயது நடந்ததென்றும்† இளங்கோவடிகள் தெளிவாகக் கூறுகின்றார். எனவே, செங்குட்டுவன், 47-ம் வயதாரம்பத்தே அவ்வடயாத்திரை தொடங்கினனென்று தெளியலாகும். இவனது 47-ம் வயதிற்குச் சிலகாலத்துக்கு முன்புதான், தன் மைத்துனச்சோழற்கு அனுகூலமாகச் சோணாட்டில் இவன் போர் நிகழ்த்தியது. போரின் விவரம் முன்னரே விளக்கப்பட்டது; செங்குட்டுவனது வடயாத்திரைக்குச் சிறிதுமுன்பே இவன் மைத்துனச்சோழனைப் பட்டத்தில் நிறுவியசெயல் நிகழ்ந்ததென்பது, கங்கைக்கரைப்பாடியில், மாடலனை இவன் சந்தித்தபோது, அச்சோழனது க்ஷேமத்தைப்பற்றி உசாவிப்போந்த குறிப்பால் புலப்படும்.‡ இச்சேரன் தன் பெரிய

---

* சிலப். 27. 149. † ஷ. 28. 130. ‡ ஷ. 27. 159—72.

யாத்திரையை முடித்துத் திரும்பியபின்னர், மாடலமறையவனது உபதேசமாட்சியால் பரகதிவழிகளையே பற்றியவனாய், 5-வருஷம் அமைதியுடன் ஆட்சிபுரிந்து பின் "காலனென்னும் கண்ணிலி யுய்ப்ப—மேலோருலகம் எய்தினன்"

இதுகாறும் எழுதிவந்த சரித்திரத்தால் தமிழ்நாட்டின் மகோந்நதநிலைமைக்குச் செங்குட்டுவனது ஆட்சிக்காலமே சிறந்த இலக்காகவிருந்ததென்பது வெள்ளிடைமலைபோல் விளக்கமாகும். பண்டைத் தமிழிலக்கியங்களைச் சோதித்து வருமிடத்து, நம் சேரர்பெருமான்போன்ற அறிவுந் திருவும் பெற்ற அருந்திறலரசர் தென்னாட்டில் அதிகமிருந்திலர் என்பது புலப்படத் தடையில்லை. பழைய தமிழ் வேந்தருள்ளே, இவன்றந்தை சேரலாதனும் சோழன் கரிகாற்பெருவளத்தானுந் தவிர, வேறெவரும் இவனுக்கிணை கூறத் தக்கவரல்லர்; அவ்விருவரும் தங்கள் வீரப்புகழை நாவலந்தீவ முழுதும் விரித்துநின்றவர்களாயினும், தமிழ்வேந்தர்க்கே அப்பெருமையுரியதென்பதை வடவேந்தர்கள் நன்கறியச் செய்து, அவர்கள் விரித்தபுகழை நிலைநிறுத்திய வீரசிகாமணி நம் சேரர்பெருமானே யாவன். பிற்காலத்திலே இவனுக்கிணையாகச் சொல்லத்தக்க தமிழ்வேந்தன் முதலாம் இராஜேந்திரசோழன் ஒருவனே எனலாம்.

சேரன்-செங்குட்டுவனது உத்தமகுணங்களுள்ளே இவனது தெய்வபக்தியை முதலில் வைத்துப் பாராட்டல்தகும். சிவபிரான் திருமால் முதலிய தெய்வங்களிடத்தும் முனிவர்* அந்தணர்முதலிய பெரியோர்கள்பாலும் இவன் வைத்

---

* சிலப் 26. 93—97.

திருந்த பக்தியும், மதாந்தரங்களில் இவனுக்கிருந்த பொது நோக்கமும் முன்னரே அறியப்பட்டன. இவையன்றி, வீர பத்தினிகளாக விளங்கியவரிடம் இவன் கொண்டிருந்த பெருமதிப்பும் பிரேமையும் ஈண்டும் விரித்தெழுதவேண்டுமோ? கண்ணகிக் கடவுளின் வணக்கம் தமிழகத்தினும் இலங்கை முதலிய தேசாந்தரங்களினும் பரவியிருந்ததற்குக் காரணமானவன் இச்சேரனேயன்றோ?

நம் சேரனுக்கிருந்த உயர்குணங்களுள்ளே அடுத்துப் புகழத்தக்கது, இவனது ஏகதார விரதமேயாம். இவனுடைய தர்மபத்தினியாகவும் பட்டமகிஷியாகவும் விளங்கிய இளங்கோவேண்மாள் என்பவளைப்பற்றி முன்னரே கூறினோம்.* வேளிர்குலக்கொழுந்தாகிய இத்தேவி, அறிவு திரு அழகு அமைதி முதலிய உயர்குணங்களெல்லாம் ஒருங்கு வாய்ந்திருந்ததோடு, தன் நாயகனுக்கு உற்றசமயங்களில் உறுதி கூறும் ஆற்றலுடையவளாகவும் விளங்கினள். செங்குட்டுவன் பத்தினிக்கடவுளைச் சிறப்பித்ததற்கும், வீரப்புகழை இமயம்வரை பரப்பியதற்கும் இவ்வுத்தமிகூறிய சமயோசிதமான ஒருசொல்லன்றோ காரணமாயிற்று?† தன் கணவனைப் பிரியநேர்ந்த 32-மாதங்கள்வரை ஊணுமுறக்கமும் கொள்ளாது நாளொப்பனையுஞ்செய்யாது இப்பெருந்தேவி இருந்த பிரிவாற்றாநிலையையும், அவன் ஜயசீலனாகத் திரும்புகின்றதறிந்ததும் இவளடைந்த பெருமகிழ்ச்சியையும் அடிகள் புகழுந்திறம் பலமுறைபடித்து ஆனந்திக்கத்தக்கது. இத்தகைய ஒப்புயர்வற்ற கற்புடையாட்டியை மனைவியாகப்பெற்

* இந்நூல். பக். 24. 25. † சிலப். 25. 110—14.

றிருந்த நம் சேரர்பெருந்தகைக்குச் சிராமமூர்த்தியன்றி வேறியாவர் சிறந்த உவமையாவார் ?

சேரன்-செங்குட்டுவனது இயற்கைக்குணங்கள் பல வற்றுள்ளே அவனது வீரத்தன்மையே மேம்பட்டுவிளங்கி யிருந்ததென்பது, இவன் சகோதரரும் பாணரும் அக் குணத்தையே அதிகமாகப்புகழ்தலால் தெரிகின்றது. இவ னுக்குக் காமவேட்கையினும் போர்வேட்கையே மிக்கிருந் தது என்று புகழ்வர், பிற்கூறிய அந்தணராகிய புலவர்.* இவ்வேந்தனது அந்தியகாலத்துக்கு ஐந்துவருஷம் முன் வரை பகைவரையடக்குவதும் நாட்டைப் பெருகச்செய்வது மே இவன் மேற்கொண்டிருந்த பெருங்கருமமாக இருந்தன. மாடலமறையோன் ஒருகாற் செங்குட்டுவனுக்கு உபதேசிக் கப்புக்கவிடத்தில், அவனது இக்குணத்தையே சுட்டி,

> "வையங் காவல் பூண்டநின் னல்யாண்டு
> ஐயைந் திரட்டி சென்றதற் பின்னும்
> அறக்கள வேள்வி செய்யாது யாங்கணும்
> மறக்கள வேள்வி செய்வோ யாயினை."
>
> (சிலப். 28. 129—32.)

எனக் கூறுதல் காண்க. இதனால், தன்னுயுட்காலத்தின் பெரும்பகுதியைப் போர்புரிவதிலே செலவிட்டவன் செங் குட்டுவன் என்பது வெளியாகும். பாணரும் இவன் வீரத் திறத்தையே வியந்து, "அனைய, பண்பிற் றானைமன்னர், இனி யாருளரோ முன்னுமில்லை" எனக்கூறினர்.† தமிழரது வீரத் திற் செங்குட்டுவனுக்கு மதிப்பும் அபிமானமும் அதிக

* பதிற்றுப். 50. † ஷை. 45.

மாகவே யிருந்தன. தன்னையும் மற்றைத் தமிழரசரையும் வீரக்குறைகூறி இகழ்ந்தார் என்பதுபற்றியன்றோ, இமயச் சாரலிலுள்ள குயிலாலுவம்* என்னும் போர்க்களத்தில், இவன் வடவரசர் பலரை

"அமையா வாழ்க்கை யரசர் வாய்மொழி
நம்பால் ஒழிகுவ தாயின் ஆங்கஃது
எம்போல் வேந்தர்க்கு இகழ்ச்சியுந் தரூஉம்."
(சிலப். 26. 10—12.)

"காவா நாவிற் கனகனும் விசயனும்
விருந்தின் மன்னர் தம்முடன் கூடி
அருந்தமி ழாற்றல் அறிந்தில ராங்கெனச்
சீற்றங் கொண்டிச் சேனை செல்வது."
(ஷை. ஷை. 159—62.)

என இவனது தமிழபிமானத்தை இளங்கோவடிகளே எடுத்துரைத்தல் காண்க. செங்குட்டுவனது பெரும்புகழ் தமிழகத்தின் மட்டுமன்றி, வடநாடெங்கும் பரவியிருந்ததென்பது, இவனது யாத்திரையில், நட்பரசராகிய நூற்றுவர் கன்னர் இவனுக்குச் செய்துபோந்த உபசாரங்களாலும், பிறவற்றாலும் தெளிவாகும். ஆயின், அசோகன் சமுத்திரகுப்தன் முதலிய வடவேந்தரது தென்னாட்டுவிஜயங்களை விளக்கும்

---

* குயிலாலுவம், என்பது இமயமலையின் ஒரு பகுதியாய், உத்தர கோசலத்தைச் சார்ந்த ஒரு தலமாகத் தெரிகிறது. இங்குச் சிவபிரானுக்கு ஒரு கோயிலும் இருந்ததென்பது, 'இமயச் சிமயத் திருங்குயிலாலுவத்து—உமையொரு பாகத் தொருவனை வணங்கி' என்னும் இளங்கோவடிகள் வாக்கால் அறியலாம். (சிலப். 28. 102—8) புத்தரது பூர்வ அவதாரஸ்தலங்களுள் ஒன்றாகச் சொல்லப்படும் குயிலாலபுரம் என்பது இதுபோலும். (மணிமே. புத்தசரித். பக்கம். 2. கீழ்க்குறிப்பு.)

சாஸனங்கள் தக்ஷிணத்துக் காணப்படுதல்போலச் செங்குட்டுவனது வடநாட்டு வெற்றிபற்றிய சாஸனமொன்றுமே அத்தேசத்தில் இதுகாறும் காணப்படவில்லை. அதனால், இவனது வடதேசத்துப் படையெடுப்பில் நவீனர் சிலர் ஐயுறுவர். ஆயினும், இவனுடன்பிறந்த சகோதரர் மட்டுமன்றி இவன்காலத்துப் புலவர்களிருவரும்,* அவ்வடவெற்றியை விரிவாகவும் தெளிவாகவுங் கூறியிருத்தலால், அதனை எளிதிற் றள்ளிவிடுதல் எங்ஙனம் இயலும்? அன்றியும் சேரநாட்டை அடுத்திருந்தவரான கங்கவமிசத்தரசர்கள் இற்றைக்கு 800-வருஷங்கட்கு முன்னர், இமயம்வரை படையெடுத்துச்சென்று நேபாளதேசத்தைச் செயித்து அதனைப் பலதலைமுறை ஆண்டுவந்தனர் எனச் சாஸனமூலம் அறியப்படுகின்றது.† ஆயின், அவரினும் பெருமைவாய்ந்தவராய்ப் பக்கத்திருந்த சேரவரசர் வடநாட்டில் தம்வீரப்புகழ் பரப்பினர் என்றுகூறும் இலக்கியப் பிரமாணங்களைமட்டும் கற்பனையாகக் கருதுவதென்னோ? பிற்காலத்துத் தமிழ்வேந்தருள் முதலாம் இராஜேந்திரசோழன் கங்கையும் கடாரமும் (பர்மா) வென்றுகொண்டானென்ற சரிதம் நம்மவரால் முற்றும் நம்பப்பட்டுவருகின்றது; ஆயின், பழைய சேரனொரு

* பதிற்றுப். 43:

† It is curious that a Karnataka dynasty was set up even in distant Nepal, apparently in 1097, which was presumably of Ganga origin. The founder, Nanya Deva (perhaps? Nanniya Deva), came from the South. He was succeeded by Ganga Deva and four others, the last of whom removed the capital to Khatmandu, where the line came to an end.—Ins. from Nepal, by Dr. G. Buhler"—(Lewis Rice's Mysore and Coorg from the Inscriptions p. 48.)

வன் பெருவீரனாய் அக்காரியத்தையே செய்திருத்தலும் கூடியதன்றோ? செங்குட்டுவனது பிரஸ்தாபத்தைப்பற்றிய தென்னாட்டுச் சாஸனம் ஒன்றுமே இதுவரை காணப்படவில்லை; அதுபற்றி அத்தகைய வேந்தனொருவனே இருந்தவனல்லன் என்று கூறிவிடலாகுமோ? கடைச்சங்கநூல்களிற் கண்ட அரசரைப்பற்றிய சாஸனக்குறிப்புக்களே இல்லை என்றிருந்தகாலத்து, முதுகுடுமிப்பெருவழுதி, தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், கரிகாலன், கோச்செங்கணான் போன்றவரைப்பற்றிய சாஸனக்குறிப்புக்கள் சிறிதுசிறிதாகச் சமீபத்திற்றான் காணப்பட்டுவருகின்றன. அதுபோலவே, செங்குட்டுவனது அருமை பெருமைகளும் நாளடைவில் வெளிப்படுதல் கூடியதே. ஆதலால், சாஸனசாக்ஷிக ளில்லாமைபற்றி இலக்கியச்செய்திகளையெல்லாம் புறக்கணித்துவிடுதல் கூடாதென்பதே எங்கருத்து. செங்குட்டுவன் வடநாட்டிற் படையெடுத்துச் சென்றதற்குக் காரணம் 'தமிழ்வேந்தர்கள் தம் முத்திரைகளை இமயத்திற் பதித்தவர்' என்ற பெருமையை வடவரசர்சிலர் இகழ்ந்து கூறியதனால், அப்பெருமை தங்கட்குண்டென்பதை மெய்ப்பித்தற்காகவே என்பது இளங்கோவடிகள் வாக்கால் நெடுக உணர்ந்தோம். அங்ஙனம் தமிழராற்றலை வடவர்க்கு மெய்ப்பித்த நம் சேரர்பெருமானது அருஞ்செயலைச் சாஸனஆதாரமின்மைபற்றிச் சிலர் எளிதாக்கிவிடுவராயின், அஃது 'அவ்வடவேந்தர் செயலினும் அதிசயிக்கத்தக்கதேயன்றோ!

செங்குட்டுவன், வீரமிகுதியோடு மதிநுட்பமிக்கவனாகவும் இருந்தான். அறிஞர்பலருடன் அளவளாவி அறியவேண்டுவனவற்றை நன்கறிந்தவன் இவனென்பது, "புரை

யோர் தம்மொடு பொருந்த வுணர்ந்த-அரச ரேறே"* எனவும், "புலவரையிறந்தோய்†" எனவும் தத்துவஞானியாகிய மாடலமறையோனே நம் சேரனை அழைத்தலால் அறியலாம். மதுரையிற் கோவலனைக் கொல்வித்து, அத்தவற்றையறிந்ததும் பாண்டியன் தன்னுயிர்நீத்தசெய்தியைச் சாத்தனார் வாயாற் செங்குட்டுவன் முதன்முதற்கேட்டபோது அவ்வரசனதுசெய்திக்கு மிகவும் வருந்தி,

> "எம்மோ ரன்ன வேந்தர்க் கிற்றெனச்
> செம்மையி னிகந்தசொற் செவிப்புலம் படாமுன்
> உயிர்பதிப் பெயர்ந்தமை யுறுக வீங்கென
> வல்வினை வளைத்த கோலை மன்னவன்
> செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது;
> மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
> பிழையுயி ரெய்திற் பெரும்பே ரச்சம்
> குடிபுர வுண்டுங் கொடுங்கோ லஞ்சி
> மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
> துன்ப மல்லது தொழுதக வில்லை" (சிலப். 25. 95—104.)

என்று கூறிபோந்த வார்த்தைகள், உண்மையில் எவ்வளவு பொருள் பொதிந்துள்ளன? இளங்கோவடிகள் பேரியாற்றங் கரையில் தம் தமயனுடனிருந்து அவன் வாய்ப்படக் கேட்டெழுதிய அழகிய வசனங்களன்றோ இவை? புலவர்பெருமக்களிடம் இவன் வைத்திருந்த மதிப்பும் அன்பும் முற்கூறிய "இருபெரும்புலவர்" என்ற அதிகாரத்தால் விளங்கற்பாலன.

நம் சேரவேந்தனது செங்கோற்பெருமையும் மதிக்கத்தக்கதே. தன்னாட்டுக் குடிகளைப் பெரிதும் அபிமானித்து

* சிலப். 28. 123—4. † ஷை. ஷை. 174.

ஆட்சிபுரிவதிற் பெருநோக்குடையவன் இவனென்பது, ஒரு சமயத்து இவன்செய்த சபதத்தில் "வறிது மீளுமென் வாய்வா ளாகிற் - குடிநடுக் குறூஉங் கோலே னாகுக"* என்று கூறியிருப்பதொன்றானே தெளிவாகும். குடிகளும் அங்ஙனமே இவன்பாற் பேரன்பு பூண்டிருந்தசெய்தி முன்னரே குறிப்பிட்டோம். இவ்வேந்தனது சகோதர அபிமானத்தையும் ஈண்டுக் குறித்தல் தகும். தன் சகோதரரான இளங்கோவடிகள் முற்றத்துறந்த முனிவரராயிருப்பினும், அவசியமானகாலத்தன்றி அவ்வடிகளை இவ்வரசன் விட்டுநீங்கியவனல்லன்.† அவ்வாறே, "ராஜருஷி"யாகிய அடிகளும் தம் தமையனிடம் பிறவிக்குற்ற அன்பைப் பெற்றிருந்தவரேயாவர். ஆனால், அதுபற்றி, மூவேந்தர்க்கும் பொதுவாக ஒரு காப்பியஞ்செய்யத் தொடங்கிய தாம், நடுநிலை பிறழ, தம் தமையனை அதிகமாகப் புனைந்துகூறினவராகத் தோற்றவில்லை. அடியார்க்கு நல்லாரும் இவ்வடிகளது பொதுநோக்கை அடிக்கடி புகழ்தலுங் காணலாம்.‡ ஆனால், வஞ்சிக்காண்ட முழுதும், செங்குட்டுவன் புகழையே அவ்வடிகள் கூறியதென்னெனின், கண்ணகிபொருட்டு அரியபெரிய செயல்களைப்புரிந்து சிறப்பித்தபெருமை செங்குட்டுவனதேயாதலின், எடுத்துக்கொண்ட காப்பியநிலைக்கேற்ப அவனைப் பாராட்டுதலும் இன்றியமையாததாயிற்றென அறிக.

இவ்வளவு பெருமையுடன், நம் சேரர்பெருமான் சிறிது முன்கோபமுடையவனாகவுந் தோற்றுகிறான். ஆயினும், பெரியோர்கூறும் நன்மொழிகளை ஏற்றுக்கொள்வதில் இவன்

---

* சிலப், 26. 15, 18. † ஷை 25, 5 அரும்பதவுரை. பக். 66.
‡ ஷை. 18-ம் காதை. 'முந்நீரினுள்புக்கு' உரை.

முந்துகின்ற இயல்புடையவனுயிருந்தனன். இவ்விஷயம் சோழபாண்டியரிடம் இவன் கோபங்கொள்ள நேர்ந்தபோது, மாடலமறையோன் கூறிய சாந்தவசனங்களை விரைந்தேற்றுக் கோபமடங்கியதும், தன்னால் வென்று சிறைபிடிக்கப்பட்ட கனகவிசயரைச் சிறைநீக்கியதோடு, அவர்களைச் சிறைப்படுத்திய வில்லவன்கோதை என்ற படைத்தலைவனைக்கொண்டே அன்னோரை உபசரிக்க ஏவியதும், பின்னர் அவ்வந்தணன் கூறிய தர்மமார்க்கங்களையே அநுஷ்டித்ததுமாகிய வரலாறுகளால் விளங்கும். "அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்—நின்றது மன்னவன் கோல்" என்றபடி நம் வேந்தன் பிராமணதர்மங்களைத் தன்னாட்டில்மட்டுமன்றித் தான் சென்றவிடங்களிலும் ஆதரித்துக் காத்துவந்தவன்.* இக்காலச் சேரவரசர்க்கும் இஃது இயல்பேயன்றோ?

இனி, நம் சேரர்பெருந்தகை, குட்டுவன் எனத் தனித்தும் வழங்கப்படுவன்.† இதனால், இவனுக்குரிய அடைசொல் இவனது நிறம்பற்றி வழங்கப்பட்டதென்பது பெறப்படும். இவன் சிறியதந்தைக்கும் குட்டுவன் என்பது பெயராயினும் 'பல்யானைச் செல்கெழு' என்பது அவனுக்கு விசேடணமாகும். [குட்டுவன் - குட்டநாட்டுக்குரியோன்.] இங்ஙனம் செங்குட்டுவன் என்றதற்கேற்பப் பிறரெல்லாம் கண்டுமகிழும் கட்டழகும் உடையனாகவிருந்தான்.‡ இவற்றுடன் பலமும் பருமனும் கொண்டவனாகவும் காணப்படுகின்றான். கங்கைக்கரைப்பாடியில் மாடலனுக்குச் செங்குட்டுவன் தன் நிறையளவு பொன்னை நிறுத்துத் தானஞ்செய்தானென்பதை எழுதுமிடத்தில் இளங்கோவடிகள்,

---

* சிலப். 26. 247—50. † ஷை. 26: 61, 247; ‡ 26: 73.

"பெருமகன் மறையோற் பேணி யாங்கவற்கு
ஆடகப் பெருநிறை ஐயைந் திரட்டி
தோடார் போந்தை வேலோன் தன்னிறை
மாடல மறையோன் கொள்கென் றீத்தாங்கு"

(சிலப். 27. 173—76)

எனக் கூறுகின்றார். இதனுள்ளே, இவனது நிறையளவாகக் குறிக்கப்பட்ட "ஆடகப்பெருநிறை ஐயைந்திரட்டி" என்பதற்கு, அரும்பதவுரையாளர் "ஐம்பது துலாம் பாரம் பொன்" என்று கூறுவர். ஒரு துலாம் என்பது 100-பலமாகும்;* ஆகவே, 50-துலாத்துக்கு 5000-பலமாகின்றன. ஒரு பலமென்பது 3-ரூபா எடையாகவும், 6-ரூபா எடையாகவும் இக்காலத்தார் பலபடியாக வழங்குதலால், பழைய காலத்துப் பலவளவு இதுவென்று துணியக்கூடவில்லை. எனினும், குறைந்தமுறையிலே, தற்காலத்து 3-ரூபா எடைப் பிரமாணத்தையே கொண்டு பார்ப்போமானால், 40-ரூபா நிறைகொண்ட பௌண்டுக் கணக்கில் 375-பவுண்டு செங்குட்டுவனது நிறையாகவேண்டும். இது சிறிது மிகுதிபோலத் தோற்றுமாயினும், பழையகாலத்து மக்களுள்ளே பெருவீரனுகவிளங்கிய வேந்தர்பெருந்தகையொருவனுக்கு மேற்குறித்த நிறையளவு அதிகமாகாதென்றே தெளியலாம். ஒருகால், மூன்றுரூபா நிறைக்குங் குறைந்ததாகப் பழையபலவளவு இருந்திருத்தல் கூடுமாயின், அஃது இக்காலவியல்புக்கும் ஒத்ததாகலாம். எங்ஙனமேனும், தற்காலத்தும் 300

* பிங்கலந்தை. சூத்திரம்-2254—55.

பவுண்டு நிறையளவுள்ள மக்களை நாம் காணக்கூடியதாக வே இருத்தலால், இளங்கோவடிகள் தம் தமையனுக்குக் குறித்த 50-துலாமளவு, புனைந்துரையன்றிப் பொருத்த முடையதாகுமென்பதில் ஐயமில்லை. இது நிற்க. சேரன்-செங்குட்டுவனது 50-ம் வயதில் "நாற்பதும் வந்தது நரைத் தூதும் வந்தது" என்ற முன்னோர்மொழிப்படி, அவன் நரை முதிர்ந்தவனாகவே இருந்தனன்; "திருவொழி ரகலத்துச் செங்கோல் வேந்தே—நரைமுதிர் யாக்கை நீயுங் கண்டனை"* என மாடலன் இவனைநோக்கிக் கூறுதலால் இதனையறிக. சேரவரசர் பலருள்ளே, செங்குட்டுவனும் இவன்றந்தை சேரலாதனும் அதிககாலம் ஆட்சிபுரிந்தவர்கள் என்பது, பதிற் றுப்பத்தின் பதிகங்களாற் புலப்படுகின்றது.



* சிலப். 28. 157—8.

## 13-ம் அதி:—

## செங்குட்டுவன் காலவாராய்ச்சி.



இனி, செங்குட்டுவன்காலத்தை ஆராய்வோம். இவ் வேந்தன் வாழ்ந்தகாலத்தை ஆராய்வதினின்று, தமிழ்ச்சரி தத்தின் முக்கியமான பகுதியொன்றையே நாம் தெரிதல் கூடும். எவ்வாறெனின், இச்சேரனைப் பாடிய பரணரும் சாத்தனாரும் அவர்கள்காலத்துப் புலவர்கள்பலரும் கடைச் சங்கத்தவரென்பதும், அப்புலவர்களாற்பாடப்பட்ட பேரரச ருஞ் சிற்றரசரும் அக்காலத்தையே சூழ்ந்திருந்தவரென்ப தும் சங்கநூல்களால் நன்கறியப்படுகின்றமையால், இவ் வாராய்ச்சியிலிருந்து அப்புலவர் அரசர்களது காலநிலையும் தெளிவாகக்கூடுமன்றோ? இதுபற்றியே, தமிழறிஞர் சிலர் இவ்வேந்தன் காலத்தையாராய முற்படுவாராயினர். இன் னோருள், காலஞ்சென்ற ஸ்ரீ. கனகசபைப்பிள்ளையவர்களை இங்கே குறிப்பிடல் தகும். கடைச்சங்க காலம்பற்றி இவர் கள் எழுதிப்போந்த காரணங்களுள் முக்கியமானவை இரண் டெனலாம்.

முதற்காரணம்—செங்குட்டுவன் காலத்தவனாக இளங் கோவடிகள் கூறிய இலங்கைவேந்தன்-கயவாகுவின் காலத் தைக்கொண்டு அச்சேரன்காலத்தை அளந்ததாம்; அஃதா வது, இலங்கைச்சரித்திரத்துட்கண்ட கஜபாகு என்ற பெய ருடையார் இருவருள், முன்னவன் கி. பி. இரண்டாநூற் றாண்டிலும், பின்னவன் 12-ம் நூற்றாண்டிலும் ஆண்டவர் எனப்படுகின்றனர். இவருள் இண்டாமவன், மிகப்பிந்திய

காலத்தவனாதலின், கி. பி. 113—135 வரை ஆட்சிபுரிந்தவனாகத்தெரியும் முதற்கயவாகுவே நம் சேரன்காலத்தவனாதல்வேண்டும் என்பதாம்.

இரண்டாங் காரணம்—செங்குட்டுவனுக்கு நட்பரசராக இளங்கோவடிகள் குறித்த நூற்றுவர்கன்னரைப் பற்றியது. நூற்றுவர்கன்னர் என்போர், மகதநாடாண்ட சாதகர்ணி என்ற ஆந்திரவரசரைக் குறிக்கும் தமிழ்வழக்கென்றும், மச்சபுராணத்தின்படி, அப்பெயர்தரித்த அரசனது காலம், கி. பி. 77—133 வரையாகுமென்றுங் கூறப்படுகின்றன. இங்ஙனம், நூற்றுவர் கன்னர் என்ற அரசன் காலமும், மேற்குறித்த கயவாகுவின்காலமும் மிகநெருங்கியிருத்தலால், அவ்விருவருடன் நட்புப்பூண்டிருந்த செங்குட்டுவனுக்கு கி. 2-ஆம் நூற்றாண்டையே கொள்ளுதல் பொருந்தும் என்பது.*

இவ்வாறு, செங்குட்டுவன்காலம், 2-ம் நூற்றாண்டாக எழுதப்பட்டகொள்கையானது, நம்மவருட் பெரும்பாலாருடைய நன்குமதிப்பும் சம்மதமும் பெற்றிருத்தலை நாம் அறிவோம். ஆயினும், சமீபத்தில்நிகழ்ந்த எமதாராய்ச்சியில், அம் 'முடிந்த' கொள்கையை விரோதித்து நிற்கும் முக்கியமான விஷயங்கள்சில எதிர்ப்படலாயின. இவற்றினின்று, நம் சேரன், மேற்குறித்த காலத்துக்கும் இரண்டு மூன்று நூற்றாண்டுவரை பிற்பட்டவனாகத் தோற்றுகின்றது.

---

*ஸ்ரீமாந்-S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்காரவர்கள் M.A., கயவாகுவின் காலம் 179—201 வரை ஆகுமென்றும், நூற்றுவர் கன்னர் எனப்பட்ட சாதகர்ணி என்பான் 172—202 வரை ஆட்சிபுரிந்த யஜ்ஞஸ்ரீசாதகர்ணி ஆதல்வேண்டுமென்றும் சில மாற்றங்கள்செய்து எழுதுவர்; இவர்கள் கருத்துப்படி, செங்குட்டுவன் 2 அல்லது 3-ம் நூற்றாண்டினனாவன் (செந்தமிழ். 4-ம் தொகுதி. பக். 525—27).

இதற்குரிய காரணங்களை இங்கு விவரிப்பதால், சங்ககாலத்தைப்பற்றி ஐயுறுது சமாதானம்பெற்றிருக்கும் உள்ளங்கட்கு இடையூறுகுமோ என்றஞ்சுகின்றேம். எனினும், அபிப்பிராயங்களை மறைப்பதனுற் சரித்திரவுண்மை வெளிப்படுதல் தடைப்படுமாதலின், அறிஞர் ஆராய்ந்து ஏற்றபெற்றிகொள்ளுமாறு, அவற்றை ஈண்டு வெளியிடுவேம்.

கடைச்சங்ககாலத்தில் விளங்கிய புலவருள்ளே, கபிலர், பரணர், நக்கீரர், மாமூலர், சாத்தனுர் முதலியோர் சிறந்தவர்களென்பது, யாவரும் நன்கறிவர். இவருள், மாமூலனுர்—சோழன் கரிகாலன், சேரலாதன், கள்வர்கோமான் புல்லி முதலிய அரசர்காலத்தவர் என்பதும், தமிழ் நாட்டின் பலபாகங்களிலும் வடநாடுகளிலும் இவர் சஞ்சரித்து வந்தவரென்பதும், அகநானூற்றிற்கண்ட இவர் பாடல்களால் அறியப்படுகின்றன. இப்புலவர், செங்குட்டுவனுற் போரில் வெல்லப்பட்ட பழையன்மாறனுக்கும் மோரியருக்கும் நிகழ்ந்த போரொன்றையும் குறிப்பிடுதலால்* அச்செங்குட்டுவன் காலத்தவராகவும் தெளியப்படுகின்றுர். இனி, இம்மாமூலனுர்வாக்காகவுள்ள, அகநானூற்றின் 265-ம் பாட்டிற்கண்ட அரிய செய்தியொன்று ஈண்டு ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளத்தக்கது: அஃதாவது—

> "பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
> சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை
> நீர்முதற் கரந்த நிதியங் கொல்லோ."

என்பது. இவ்வடிகளிலே, நந்தருடைய புராதன ராஜஸ்தலமாகிய பாடலீபுரத்துள் கங்காநதி பிரவேசித்து அதன்

* அகநானூறு. 251.

வளங்களை அழிந்துப்போந்த செய்தி குறிக்கப்படுதல் காணலாம். இவ்வாறு, கங்காப்பிரவாகத்தால் பாடலீபுரம் தன் வளங்களையிழந்து வறுமையுற்ற விசேடம் எக்காலத்து நிகழ்ந்தது? என்பதை இனி நோக்குவோம்.

பாடலீபுரமானது, நந்தர் மௌரியர் ஆந்திரர் முதலிய பிரபல சக்கரவர்த்திகளது ஆட்சித்தலமாய், இப்பரதகண்டத்துக்கே ஒரு சிரோரத்தினம்போல் மிருந்த பிரசித்தம்பெற்று விளங்கியதாகும். இதன் வரலாறு, தக்க சாஸனங்கள் மூலமாகப் பல நூற்றுண்டுகள்வரை தெரியக்கூடிய நிலையில் உள்ளது.* மௌரியவரசருள் முதல்வனாகிய சந்திரகுப்தனும், அவன்பெயரன் அசோகசக்கரவர்த்தியும் வீற்றிருந்து ஆட்சிபுரிந்த அரண்மனை, கி. பி. 4-ம் நூற்றுண்டுவரை அதன் பழைய நிலைப்படியே இருந்துவந்ததென்பது, பா-ஹியான் (Fa-Hian) என்ற சீனவித்வான் அம்மஹாநகரத்தை நேரிற் கண்டு புகழ்ந்திருத்தலால் தெளிவாகின்றது. இதனால், அசோகன் காலந்தொட்டு பாஹியான் வரவுநிகழ்ந்த 4-ம் நூற்றுண்டிறுதிவரை எவ்வகைச் சிதைவுமின்றித் தன் பழைய நிலையில் அந்நகரம் இருந்துவந்ததென்பது நன்கு விளங்கும்.

இனி, அந்நகரம், மேற்குறித்தபடி, இன்னகாலத்தில் அழிவுற்றது என்பதை விளக்கற்கு நேரான பிரமாணம் இப்

* பழைய பாடலீபுரமானது, சோணைநதியின் (Soṅ) வடகரையிலும், கங்கைக்குச் சிறிதுதூரத்தும் அமைந்திருந்ததென்றும், 9-மைல் நீளமும் 1½-மைல் அகலமும் உடையதென்றும், 64-வாயில்களும், 574 கோபுரங்களும், சோணைநதியின் ஜலத்தால் நிரம்பிய அகழும் உடைத்தாயிருந்ததென்றும் பூர்வீகர்பலர் எழுதிய குறிப்புக்களால் தெரிகின்றன. (V. A. Smith's Early History of India. p. 119—20.)

போது காணப்படவில்லை. ஆயினும், கி. பி. 7-ம் நூற்றாண்டில் சீனதேசத்தினின்றுவந்து நம் நாடெங்கும் சஞ்சரித்த பிரசித்த யாத்திரிகரான ஹ்யூந்-த்ஸாங் (Hiuen-Tsung) என்பவர் இந்நகரத்தை நேரிற் பார்த்துவருதற்பொருட்டுச் சென்றபோது, அது தன் பூர்வநிலையை முற்றுமிழந்து, கங்கைக்கரையில் 200, 300-வீடுகளுடையதாய் 1000-ஜனங்கள் வசித்துவந்த ஒரு சிறு கிராமமாக மாறிவிட்டநிலையை அவர் குறித்திருக்கின்றார். இதனால், கி. பி. 400-ல் தன் பழைய பெருமையோடு விளங்கிய பாடலீபுரம், ஹ்யூந்-த்ஸாங் வந்த காலமான கி. பி. 650-க்கு முன் கங்கையால் அழிவுற்றிருத்தல் வேண்டுமென்பது ஐயமின்றிப் பெறப்படும். சந்திரகுப்தன் காலத்தவரான மெகஸ்தனிஸ் என்ற யவனதூதரால் குறிக்கப்பட்டதும், பாடலியைச் சூழ்ந்திருந்ததுமான பெரிய மாக்கோட்டை சமீபத்திற் கண்டெடுக்கப்பட்ட விவரத்தை எழுதுமிடத்தில், ஸ்ரீ. ரோமேசசந்திர தத்தர் தம் நூலிற் காட்டியுள்ள கீழ்க்குறிப்பு ஈண்டுக் கவனிக்கத்தக்கது.

"சீனதேச யாத்திரிகரான பாஹியான் வந்து பார்த்தபோது, கி. பி. 5-ம் நூற்றாண்டில் அம்மரச்சுவர்கள் அழியாதிருந்தன. பாஹியான் எழுதுவதாவது—'அந்நகரத்துள்ள அரண்மனைகள்* பூதகணங்கள் கொணர்ந்துசேர்த்த கற்களால் நிருமிக்கப்பட்ட சுவர்களுடையனவாகும். அக்கட்டிடத்துச் சாளரங்களை அலங்கரித்து நிற்கும் சித்திரங்களும் பிரதிமைகளும், இக்காலத்தவராற் செய்யமுடியாத அவ்வளவு வேலைத்திறம் வாய்ந்தவை. அவைகள், முன்பிருந்தவாறே இன்றும்

* இப்பழைய அரண்மனை, பாங்கிபூர் (Bankipore) பாட்னா (Patna) நகரங்கட்கு இடைப்பட்ட ரயில்வேயின் தென்பாரிசத்து, குமாராஹார் (Kumarahar) கிராமத்தின் வீடுவயல்களின்கீழ்ப் புதையுண்டிருந்ததாகத் தெரிகிறது. (V. A. Smith's Early History of India. p. 120. note.)

உள்ளன.'—என்பது. பாடலீபுரத்தின் அழிவானது, பாஹியான் காலத்துக்குப்பின் மிகவும் அடுத்து நிகழ்ந்ததாம். ஏனெனின், 7-ம் நூற்றாண்டில் ஹ்யூந்-த்ஸாங் என்ற மற்றொரு சீனயாத்திரிகர் ஆங்கு வந்து பார்த்தபோது, அந்நகரத்தின் அழிவுபாட்டையும், 200, 300-வீடுகளுடைய ஒருசிறு கிராமத்தையுந்தவிர, வேறொன்றையும் அவர் அங்குப் பார்க்கவில்லை"—எனக் காண்க.*

மேற்கூறியவற்றால், பாடலீபுரம் கி. பி. 5, 7-ஆம் நூற்றாண்டுகட்கிடையில் அழிவுற்ற செய்தி தெளிவாகின்றது. பழைய பாடலிக்குச் சிறிது தூரத்தோடிய கங்கையானது இப்போது அதன் பக்கத்துச்செல்வதால், அம்மஹாநதியின் இடும்பிரவேசத்தாலுண்டான நிலைமாற்றமே அவ்விராஜஸ்தலத்தின் பேரழிவுக்குக் காரணமாகியதெனக் கருதலாம். ஆகவே, செங்குட்டுவன் காலத்தவரான மாமூலனார், "சீர் மிகு பாடலிக் குழீஇக் கங்கை, நீர்முதற் கரந்த நிதியம்" என்று பாடியிருப்பது, முற்கூறிய பாடலியழிவுச் செய்தியையே குறிப்பதென்பதில் தடையென்னை? ஹ்யூந்-த்ஸாங் வந்துபார்த்தபோது பாடலீபுரம் ஒரு குக்கிராமமாக மாறியதென்று அவர் எழுதினராயினும், அவ்வழிவு தமக்கு முன் இன்னகாலத்து நிகழ்ந்ததென்று அவருங் குறித்திலர்; தமது காலத்தையடுத்து அது நிகழ்ந்திருந்ததாயின் அச்செய்தியையும் அவர் கூறாமற் போகார்; அங்ஙனமின்மையால், 'அவர் வருகைக்கு இரண்டொரு நூற்றாண்டுகளுக்கு முன்பே 'அவ்வழிவு நேர்ந்திருத்தல் வேண்டும்; அஃதாவது, ஹ்யூந்-த்ஸாங்குக்கு முன்வந்தவரான பாஹியான்காலத்தை யொட்டி (கி. பி. 5-ம் நூற்றாண்டில்) அது நிகழ்ந்த

* Civilization in Ancient India. p. Part I. p. 217.

தென்பதாம்.* தத்தரவர்களும் இவ்வபிப்பிராயப்படுதல், முன் குறித்த அவர்குறிப்பைக் கொண்டு அறியத்தக்கது. இவற்ருல், பாடலியழிவைப் பாடிய மாமூலனுரும் அவர்காலத்து விளங்கிய செங்குட்டுவனும் ஏறக்குறைய அவ்வைந்தாம் நூற்ருண்டில் இருந்தவராதல் பெறப்படுகின்றது.

இனி, சேரன்-செங்குட்டுவன் மாமூலனுர் இவர்கட்கு, பாஹியான், ஹியூந்-த்ஸாங்—இருவர்க்கும் இடைப்பட்ட 6, 7-ம் நூற்ருண்டுகளையே, பாடலியழிவைக்கொண்டு, கூறுதல்கூடாதோ என்று ஒருகேள்வி இங்குநிகழ்தல் கூடியதே. அவ்வாறு கொள்வதற்கு, ஒரு முக்கியமானகாரணந் தடையாகின்றது. அஃதாவது, 6 அல்லது 7-ஆம் நூற்ருண்டே சங்கத்தரசர்புலவர்க்கு உரியதாயின், அது, பல்லவசக்கரவர்த்திகளது ஆதிக்கம் தென்னுட்டில் நிகழ்ந்த ஒரு காலவிசேடமாகும்; ஆம்போது, தமிழ்ச்சிற்றரசர் பேரரசர்க்குள்ளும், அந்நியவரசர்க்குள்ளும் நிகழ்ந்த எத்தனையோ போர்களைக் குறித்துவரும் அகநானூறு புறநானூறு முதலிய பண்டைநூல்கள், பெருவலிபடைத்தவரும், யுத்தப்பிரியரும், தமிழ்நாடுமுழுதும் தம்மடிப்படுத்து ஆண்டுவந்தவருமான பல்லவரது பெயரையேனும், அவர்வரலாறுகளுள் ஒன்றையேனும் சிறிதுங்கூறுமலேசெல்வதற்குத் தக்ககாரணம் வேண்டுமன்ருே? நம் நாட்டிற் காணப்பட்டுள்ள பல்லவசாஸனங்களிலாயினும், சங்ககாலத்தரசர் செய்தி அறியப்படுவதுண்டா? அதுவுமில்லை. அதனுல், பல்லவர்கள் தென்னுட்டில் தங்கள்

* சமுத்திரகுப்தனுக்குப்பிந்திய அரசர், பாடலீபுரத்தைத் தங்கள் ராஜஸ்தலமாக்காது நெகிழவிட்டதாகத் தெரிதலாலும், அந்நகரம் அக்காலத்தே நிலைமாறிய செய்தி ஊகிக்கப்படுகிறது. (V. A. Smith's Early History of India. p. 278.)

பெருமையை நிலைநாட்டுவதற்கு முன்னதான காலமொன்றில் தான், செங்குட்டுவன்போன்ற சங்ககாலத்தவரான அரசர் திகழ்ந்திருத்தல் வேண்டும் என்பது, ஒருபோதும் தவறான வாகமாகாது. அக்காலமாவது 4, 5-ம் நூற்றாண்டே என்க. பல்லவர் இக்காலத்தே தமிழ்நாட்டிற் பிரவேசித்திருத்தல் கூடுமேனும், 6 அல்லது 7-ம் நூற்றாண்டிற்போலப் பிரபலம் பெற்றவரல்லர் என்பது, சரித்திரமூலம் அறியப்பட்டது.

முற்குறித்த நூற்றாண்டுகளே சங்ககாலமாகக் கொள்ளல் பொருந்துமென்பதற்கு மற்றொரு சிறுசான்றுமுண்டு; திகம்பரதரிசனமென்னும் சைநநூலில், விக்கிரமாப்தம் 526 (கி. பி. 470)-ல் வச்சிரநந்தி என்பவரால் தென்மதுரையில் ஒரு திராவிடசங்கம் கூட்டப்பட்டதாகச் சொல்லப்படுகின்றது.* சிலர்கருத்துப்படி, இத்திராவிட சங்கத்தையே கடைச்சங்கமென்று கொள்வதற்குத் தகுந்த ஆதாரமில்லை. ஆனால், எக்காரணத்தாலோ கடைச்சங்கம் குலைந்ததை உத்தேசித்து, அதனையடுத்துத் தமிழ்வளர்ச்சி சமயவளர்ச்சி செய்வதற்கு ஒருசங்கம் ஸ்தாபிக்கச் சைநர் இம்முயற்சிசெய்திருக்கலாம். இச்சைநதிராவிட சங்கத்தினின்றே நாலடியார் முதலிய தமிழ்நூல்கள் எழுந்தனபோலும். இச்சங்கத்தின் நோக்கம், குலைந்த கடைச்சங்கத்தைப் புனருத்தாரணஞ்செய்வதேயாயின், அக்கடைச்சங்கம் இச்சைந சங்கத்துக்குச் சிறிது முற்பட்டதாதல் வேண்டும். அஃதாவது 5-ம் நூற்றாண்டின் முற்பகுதி அல்லது 4-ம் நூற்றாண்டு ஆகும்; எங்ஙனமாயினும், இத்திராவிட சங்கத்தின் எழுச்சியானது,

* Bombay Royal Asiatic Society's Journal. Vol. XVII. No. XLIV. pp. 74

கடைச்சங்கம் 5-ம் நூற்றாண்டுக்கும் முந்தியதென்பதைக் குறிப்பதுமட்டில் நிச்சயமெனலாம்.

சேரன்-செங்குட்டுவன்காலம் 4, 5-ம் நூற்றாண்டுகளே எனக்குறிப்பிடும் மேற்கூறிய பிரமாணங்களை, மற்றோர் அரியசெய்தியும் ஆதரியாநின்றது. வடநாட்டில் மகதநா டாண்ட ஆந்திரசக்கரவர்த்திகளது வீழ்ச்சிக்குப்பின் பிர பலம்பெற்று விளங்கிய குப்தவமிச சக்கரவர்த்திகளுள்ளே, சமுத்திரகுப்தன் என்பான் திக்விஜயஞ்செய்து, இப்பரதகண்ட முழுமையும் தன் வெற்றிப்புகழைப் பரப்பியவனென்பது, சாஸனமூலம் அறியப்படுகின்றது. இம்மன்னர்பெருமான் கி. பி. 326.ல் பட்டமெய்தியவன். இவனது தென்னாட்டுப் படையெழுச்சியில் ஜயிக்கப்பட்ட வேந்தருள்ளே கேரள தேசத்து மாந்தராஜா ஒருவனென்று கூறப்படுகின்றது.* இம்மாந்தராஜா என்பவன் சங்கநூல்களிற் கூறப்படும் மாந் தரன் என்பவனாகவே தோற்றுகின்றான். ஆனால், இப்பெயர் கொண்டவரிருவர் இருந்தனரென்பதும், அவருள் ஒருவன் செங்குட்டுவனுக்குச் சிறிதுமுன்னும், மற்றொருவன் அவ னுக்குச் சிறிதுபின்னும் இருந்தவரென்பதும் முன்னமே குறிப்பிட்டோம். † இவருள் முன்னவனே, சமுத்திர குப்தனால் வெல்லப்பட்டவனாகக் கருதினும், அச்சேரன் 4-ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்தவனாதல் வேண்டும். அம் மாந்தரஞ்சேரலைப் பாடிய பரணரே செங்குட்டுவனையும்

* Gupta Inscriptions. p. 12. 13; Dr. Fleet's Dynasties of the Kanarese Districts. p. 280; Indian Antiquary, Vol. XIV, p. 181.

† இந்நூல்-பக். 18.

பாடியிருத்தலால், நம் சேரன் அம்மாந்தரனுக்குச் சிறிது பிற்பட்டவனென்பது பெறப்படும்; * அஃதாவது, 5-ம் நூற்றாண்டின் முற்பாகமென்க. இது நிற்க. சமுத்திரகுப்தனது சாஸனத்துக் கண்ட மாந்தராஜா என்னும்பெயர் தமிழ் நூல்களிற் பயிலுதலறியாமையால், அவனை வேற்றுநாட்டரசனகச் சரித்திரநூலோர் சிலர் கருதுவாராயினர்.

இனி, சமுத்திரகுப்தன் சங்ககாலத்தவனான மாந்தரஞ்சேரலை வென்றவன் என்றதற்கேற்ப, மற்றோர் அரிய செய்தியும் சங்கநூல்களில் குறிப்பிடப்படுதல் கவனிக்கத்தக்கது. முற்கூறியபடி பாடலியழிவைப்பற்றிப்பாடிய மாமூலனாரே, தம் காலத்தில், வடவாரிய வேந்தனொருவன் தென்னாடுநோக்கிப் படையெடுத்துப்போந்த பெருத்த திக்விஜய விஷயம் ஒன்றையும் இருமுறை குறிப்பிடுகின்றார். அவர் கூறுவன:—

> "முரண்மிகு வடுகர் முன்னுற மோரியர்
> தென்றிசை மாதிர முன்னிய வரவிற்கு
> விண்ணுற வோங்கிய பனியிருங் குன்றத்
> தொண்கதிர்த் திகிரி யுருளிய குறைத்த...வரை"
>
> (அகம். 281).

> "வெல்கொடித்—
> துனைகா லன்ன புனைதேர்க் கோசர்
> தொன்மூ தாலத் தரும்பணைப் பொதியில்
> இன்னிசை முரசங் கடிப்பிகுத் திரங்கத்

* "மாந்தரஞ் சேரல்" என்ற பெயரைச் சேரனொருவனுக்கு இளங்கோவடிகள் கூறியிருப்பதாலும், அவன், செங்குட்டுவனுக்கு முற்பட்டவனாதல் புலப்படுகின்றது. (சிலப். 23. 84).

தெம்முனை சிதைத்த ஞான்றை மோகூர்
பணியா மையிற் பகைதலை வந்த
மாகெழு தானை வம்ப மோரியர்
*புனைதேர் நேமி யுருளிய குறைத்த...அறைவாய்.”*

(ஷை 251.)

*எனக் காண்க. இவ்வடிகளிலே, மோரியர் திக்விஜயஞ் செய்துகொண்டு தென்னாடு நோக்கிப் படையெடுத்து வந்த காலத்தே, அவர்க்குப் பணியாமல் எதிர்த்துநின்ற மோகூர் அரசனுடன் அவர்கள் பொதியமலைப்பக்கத்தில் போர்புரிந்தனர் என்ற அரியசெய்தி கூறப்படுதல் காணலாம். இதனுட்கண்ட மோகூர் அரசனுவான், பாண்டியன் சேனுபதியான பழையன்மாறன் என்பவன்; இவனே மோகூர் என வழங்கப்பட்டவன் என்பதும், செங்குட்டுவனுல் இவன் அழிக்கப்பட்ட செய்தியும் முன்னரே குறித்தோம்.* இதனுல், மௌரியவரசரது தென்னுட்டு விஜயம், செங்குட்டுவனுற் போரில் வெல்லப்பட்ட பழையன்மாறன் காலத்து நிகழ்ந்ததென்பது தெளிவாகின்றது. இப்பெருவேந்தர் வருகையே நம் சேரனைப்பாடிய பரணரால்—*

*“விண்பொரு நெடுவரை யியறேர் மோரியர்
பொன்புனை திகிரி திரிதரக் குறைத்த...வரை”* எனவும்,

(அகம். 69.)

கள்ளில் ஆத்திரையனுர் என்ற புலவரால்—

*“விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேர் மோரியர்
திண்கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த
உலக விடைகழி”* எனவும், (புறம்.175.)

---

* இந்நூல். பக்-32, 33.

பாராட்டப்பட்டிருத்தலும் அறியத்தக்கது.* இனி, இம் மோரியர் என்பவர் யாவர்? என்பதே கேள்வியாம்.

மகதவேந்தராய்ப் பாடலீபுரத்திருந்தாண்ட மௌரிய சக்கரவர்த்திகளுள் ஆதி முதல்வனானவன், கி. மு. 321-ல் பட்டமெய்திய சந்திரகுப்தன் என்பான். இவன் காலத்து உற்பத்தியாகிய மௌரியவமிசம், சுங்கவமிசத்தவனாய் கி.மு. 184-ல் பட்டமெய்திய புஷ்யமித்திரனால் முடிவடைந்ததென்பது புராணங்களாலும் சரித்திரவாராய்ச்சியாலுந் தெளியப்பட்டது. இதற்குப்பின், மௌரியர் பிரஸ்தாபம் வடதேச வரலாறுகளிற் காண்டல் அருமையாம். ஆனால், தக்ஷிணத்திற் கொங்கணமுதலிய சில பிரதேசங்களில், மௌரியவமிசத்தவர்சிலர் கி. பி. 6, 7-ஆம் நூற்றாண்டுகளில் இருந்தனர் எனப்படுகின்றது.† இவர்களைப்பற்றிய பெருமையாவது பிற வரலாறுகளாவது சரித்திரநூல்களால் விளங்கக்கூடிய நிலையில் இல்லை. இவ்விருவகை மௌரியருள்ளே, முன்னவர் மிகவும் முற்பட்டவராகவும், பின்னவர் மிகவும் பிற்காலத்தவராதலோடு பிரபலமற்றவராகவும் காணப்படுதலால், அவ் விருவகையினருள் ஒருவரைப்பற்றியும் மாமூலனார் முதலியோர் கூறினரென்று கருதக்கூடவில்லை. ஆயினும், மௌரியர் பிரஸ்தாபத்துக்கு இடமே கிடையாததும், ஆந்திர

*மோரியரது தென்னாட்டுப் படையெழுச்சியில், அவரது சேனையுடன் தேர் செல்லுதற்குத் தடையாயிருந்த மலையொன்றைக் குடைந்து வழிசெய்துகொண்டு அவர் தெற்கே வந்தனரென்பது, மேற்கூறிய, மாமூலர், பரணர், ஆத்திரையனார் வாக்குக்களால் அறியலாம். ஆயின், அங்ஙனம் வழியுண்டாக்கப்பட்ட மலை இன்னதென்பது இப்போது விளங்கவில்லை. இப்புலவர்பாடல்களால், புறநானூற்றுரைகாரர் கொண்ட 'ஓரியர்' என்றபாடம் பொருத்தமாகாமை காண்க.

† V. A. Smith's Early History of India. p. 183.

வமிசத்தரசர் பிரபலங்குன்றியதுமான கி.பி. 4-ம் நூற்றாண்டின்தொடக்கத்தில், மௌரியமுதல்வனான சந்திரகுப்தனது பெயர்பூண்டு, அவன்தலைநகரான பாடலீபுரத்தில் பிரசித்த வேந்தனொருவன் தோன்றினனென்று சொல்லப்படுகின்றது. இவனையடுத்து மஹாவீரர்களாக சமுத்திரகுப்தனும், அவன் மகன் சந்திரகுப்த-விக்ரமாதித்தனும் விளங்கினர். இவர்களைக் "குப்தவமிசத்தவர்" என்று பொதுவாகவே சாஸனம் குறிக்கின்றதாயினும், இன்னமரபினரென்பதைத் தெளிவாக அறியவிடமில்லை. மேற்குறித்த புதிய சந்திரகுப்தனைத் தலைமையாகக்கொண்டு பாடலியையாண்ட குப்தமரபினரையே மாமூலனார் மோரியரென்று குறித்தனர்போலும். இதற்கேற்ப, அப்புலவர், இவர்களை "வம்ப மோரியர்" என்கின்றார். இதற்குப் 'புதிய மோரியர்' என்பது பொருளாதலால், பழைய மோரியரை விலக்கற்கே இவ்வடை கொடுக்கப்பட்டதாகலாம். எங்ஙனமாயினும், பிற்பட்ட சந்திரகுப்தன் மகன் சமுத்திரகுப்தன் என்பான், பரதகண்டமுழுதுந் திக்விஜயஞ்செய்து தன் வீரப்புகழை எங்கும்பரப்பிய சக்கரவர்த்தியாதலோடு,* அவன் சேரவேந்தனை மாந்தரனை வென்றவனென்றுஞ் சிறப்பிக்கப்படுகின்றான். (இதனை முன்னரே விளக்கினேம்). ஆதலால், இச்சக்கரவர்த்தியின் தென்னாட்டு வருகையையே—"வடுகர் முன்னுற மோரியர்—தென்றிசை மாதிர முன்னிய வரவிற்கு" என்னும் மாமூலனார் வாக்குக் குறித்ததாகல் வேண்டும். இக் குப்தசக்கரவர்த்திகட்கு வடுகர்சேனை கூறப்பட்டிருப்பதும் பொருந்தும்;

---

* இவன், சேரநாட்டை யடுத்திருந்த கடம்பவேந்தனை காகுஸ்தன் மகளை மணம்புரிந்தவனென்றுந் தெரிகிறது. (Mysore and Coorg. p. 23).

என்னெனின், சமுத்திரகுப்தனும் அவன் தந்தையும், ஆந்திரர் மகதநாட்டிற் றம்பழையநிலை தவறியபின், அவர் ஸ்தானத்திற் றோன்றியவராதலால், போர்வலிமைபெற்ற அவ்வாந்திரரை இவ்'வம்பமோரியர்' தம் படையாளரிற் சிறந்தவராகக்கொண்டிருத்தல் கூடியதேயாம். வெல்லப்பட்ட குடிகளை இங்ஙனமமர்த்திக் கொள்ளுதல், இக்காலத்தரசர்க்கும் இயல்பேயன்றோ? இக்குப்தர் வருகையன்றி, பிற்காலத்துக் கொங்கண - மௌரியரைப் பற்றியதே மாமூலனார் விஷயமாயின், சேரநாட்டையடுத்துப் பிரபலமற்றிருந்த சிற்றரசரும், சளுக்கியரால்* அடக்கப்பட்டவருமான அன்னோரை 'வடுகர் முன்னுற மோரியர், தென்றிசை மாதிர முன்னிய வரவிற்கு' என்றிங்ஙனம் திக்குவிசயப் பெருமைக்கேற்ற சொற்களாற் சிறப்பியார் என்க. "தென்றிசை மாதிர முன்னியவரவு" என்பதனால், அங்ஙனம்வந்த மோரியர், தென்னாட்டையடுத்த கொங்கணத்தவரன்றி, வடவாரியரே என்பதும் பெறப்படுதல் காணலாம்.

இனிப் பாண்டியன் சேனாபதியான பழையன்மாறனுக்கும் மோரியர்க்கும் நிகழ்ந்ததாக மாமூலனார்கூறிய பொதியப்போர், சமுத்திரகுப்தனது தென்னாட்டுப் படையெழுச்சியில் அவன் பாண்டிநாட்டைத் தாக்கிய செய்தியைக் குறிக்கின்றது. முற்கூறியபடி, மாந்தரனை இக்குப்தவாசன் வென்றவனாதலின், அங்ஙனஞ் சேரனை அடக்கியவன் பாண்டிநாட்டையும் வெல்லக்கருதினன்போலும். இக்குப்தனால் வெல்லப்

---

* கீர்த்திவர்மன் என்ற சாளுக்கிய வேந்தன் இம்மௌரியரை வென்று தன்கீழ்க்கொண்டான் என்பர். (Mysore and Coorg from the Inscriptions. p. 62).

பட்ட தக்ஷிணதேசத்து ராஜாக்களுள்ளே கோளனைமட்டும் இவன் சாஸனங்குறித்து மற்றச்சோழபாண்டியரைக் குறிக்காமையால், அத்தமிழ்வேந்தர் இவனுடன் எதிர்த்துநின்று அடங்காதிருந்தவராதல் வேண்டும். பாண்டியன் சேனுவீரனை பழையன்மாறன் அங்ஙனமே அடங்கவில்லை யென்பது மாமூலனார்வாக்கே காட்டுதல் காணலாம். சமுத்திரகுப்தன் காலத்துச் சோழபாண்டியர் முறையே கரிகாலனும், நெடுஞ்செழியன் அல்லது மாறன்வழுதி போன்றவருமாதல் வேண்டும். இவர்களுட் கரிகாலன் வச்சிரம்அவந்திமகதநாட்டரசரை வென்றவன் எனப்படுதலும்* நெடுஞ்செழியன் "ஆரியப்படைதந்த"வன் என்றும்† மாறன்வழுதி "வடபுல மன்னர்வாட அடல்குறித்த"வனென்றும்‡ கூறப்பட்டிருத்தலும் இச்சமுத்திரகுப்தன் போன்ற வடவரசர் விடுத்த சேனையை அக்காலத்துத் தமிழ்வேந்தர் அஞ்சாதெதிர்த்து நின்றசெய்தியைக் குறிப்பிக்கும்.

இச்சமுத்திரகுப்தன் கி. பி. 375-வரை ஆட்சிபுரிந்தவன் எனப்படுகின்றான். எனவே, இவனால் வெல்லப்பட்ட மாந்தரன், முற்கூறியபடி செங்குட்டுவனுக்குச் சிறிது முற்பட்டவனாகவும், பழையன்மாறன் அக்குட்டுவனுக்குச் சமகாலத்தவனாகவும் தெரிதலின், நம் சரித்திரநாயகனான சேரன் காலமும் 4-ம் நூற்றாண்டின் பிற்பகுதி அல்லது 5-ம் நூற்றாண்டின் முற்பகுதியாகக்கொள்ளல் பொருத்தமாம். ஆயின், சமுத்திரகுப்தன் மகனான சந்திரகுப்த-விக்கிரமாதித்தன்

* சிலப்பதிகாரம். 5-ம் காதை. 99—104.

† ஷை. மதுரைக்காண்டத்திறுதிக் கட்டுரை. ‡ புறம். 52.

(கி. பி. 375—413) அல்லது அவன்மகனான குமாரகுப்தன் (413—455) காலங்களும், நம் சேரர்பெருமான் காலமும் ஒன்றாகச் சொல்லலாம்.

இனித் தமிழ்ச்செய்திகளைக்கொண்டு, செங்குட்டுவன் வாழ்ந்த சங்ககாலத்தை நோக்குவோம். நக்கீரனாரைப் பற்றித் தமிழ்மக்களெல்லாம் நன்கறிவரன்றோ? இவர் கடைச் சங்கத்தை அலங்கரித்த பெரும்புலவரெனக் கருதப்படுதலின், அச்சங்கத்தைச் சார்ந்தவராய்ச் செங்குட்டுவனைப் பாடிய பரணர்சாத்தனார் முதலியோருக்கு, ஏறக்குறைய சமகாலத்தவரென்பது சொல்லாதே அமையும்.* இந்நக்கீரர் இறையனார் களவியலுக்குப் பொருள்கண்டவராகக் கூறப் படுகின்றார். இப்போது வெளிவந்துள்ள அக்களவியலுரை இந்நக்கீரர் செய்ததாகவே வழக்குளதேனும், அவரால் நேராக எழுதப்பட்டதன்றி அவரதாசிரியபரம்பரையின் கீழ் வழங்கியதென்பது அந்நூலின் உரைப்பாயிரத்தை ஆராய்ச்சி செய்யும்போது உணரப்படுகின்றது. அவ்வுரைப்பாயிரத்தில், நக்கீரனார் முதலாக, மாணாக்கர் பதின்மர்தலைமுறைகள் கூறப்பட்டு 'இங்ஙனம் வருகின்றதுரை' என்று முடிந்திருத்தலால், நக்கீரனார்முதல் வாய்ப்பாடமாகச் சொல்லப்பட்டு வந்த அவ்வுரை, அவர்க்குப் பத்தாந் தலைமுறைக்காலத்தே தான் நூலாக எழுதப்பட்டதென்பது விளக்கமாமன்றோ?†

---

* நம் சேரனுடன் பொருத பழையன்மாறன், கிள்ளிவளவன் என்ற சோழனை (இந்நூல்-பக்-102) வெற்றிகொண்ட செய்தியை நக்கீரனார் பாடுதல் (அகம்-346) அப்புலவரும் நம்சேரனும் சமகாலத்தவரென்பதைக் காட்டுகின்றது.

† இவ்வுரை வரலாற்றைப்பற்றி "இளம்பூரணவடிகள்" என்ற ஆராய்ச்சியினும் விரித்தெழுதியுள்ளேம். (செந்தமிழ். தொகுதி-4, பகுதி. 7.)

இக்களவியலுரை எழுத்துருவடைந்தது எக்காலத்து? என்பது இனி ஆராயற்பாலது. அவ்வுரையெழுதியோராற் காட்டப்பட்ட உதாரணச்செய்யுள்களில் அரிகேசரி, பராங்குசன், நெடுமாறன் முதலிய பெயர்கள் தரித்த பாண்டியனொருவன், சங்கமங்கை நெல்வேலி முதலிய இடங்களிற் போர் வென்றவனென்று விசேடமாகப் புகழப்படுகின்றான். சமீபத்துக்கண்ட சின்னமனூர்வேள்விகுடித்* தாமிரசாஸனங்களிற் குறிக்கப்பட்ட பாண்டிய வமிசாவளியால், அப்போர்களிலே வெற்றிபெற்ற அரிகேசரி-பராங்குசன் என்பான்† கி. பி. 770-ல் விளங்கிய‡ ஜடிலவர்மன்-பராந்தகனுடைய தந்தையென்பது தெளிவாகின்றது. இதனால் தந்தைஅரிகேசரியின்காலம் கி. பி. 770-க்கு முற்பட்டதென்பது பெறப்படும். படவே, களவியலுரை இயற்றப்பட்ட காலம் அவ் எட்டாநூற்றாண்டுக்கும் பிற்பட்டதாதுமென்பது விளங்குகின்றது. அன்றி, உரையெழுதியவர், தாம் காட்டும் உதாரணச்செய்யுளிற் கண்ட பாண்டியனது காலத்தவரே (கி. பி. 760) என்றாலும், அவரிலிருந்து 10-தலைமுறை முற்பட்ட நக்கீரனார்க்கு ஐந்தாநூற்றாண்டே உரியகாலமாதல் வேண்டும் எவ்வாறெனின், பரம்பரை வமிசங்களைத் தலைமுறை ஒன்றுக்கு 30-வருஷங்கொண்டளக்கும் முறைப்படி,¶ அக்

* Epigraphical Annual Report. 1907—8. p. 62. 68.

† இவன், கி. பி. 760-ல் இருந்த நந்திபோதபல்லவமல்லனுடன் பல இடங்களிற் போர்நிகழ்த்தியவனென்பர்.

‡ இவன் காலம் கி. பி. 770 என்பது யானைமலைச்சாஸனத்தால் அறிந்தது. (செந்தமிழ். தொகுதி-4. பக்-336.)

¶ பதிற்றுப்பத்திற் கண்ட சேரவரசர் எண்மருக்கு, அவரவர் பதிகங்கூறும் காலத்தைத் தக்கொண்டு நோக்குமிடத்தும், தலைமுறையொன்றற்கு 30-வருஷங் கொள்ளுதல், பழைய தமிழ்மக்களுக்கு அதிகமாகாதென்பது விளங்குகின்றது.

களவியலுரைக்காலமாகிய 8-ம் நூற்றாண்டைவைத்து அதனிலிருந்து 10-தலைமுறை முற்பட்ட நக்கீரர்காலத்தைக் காணுமிடத்து, அப்புலவர்பெருமான் உத்தேசம் 5-ம் நூற்றாண்டிலிருந்தவராதல் பெறப்படும். அஃதாவது,— (கி. பி. 770—10×30) 470-ல் வாழ்ந்தவர் என்பதாம். ஆகவே, அந்நக்கீரனார் காலத்தை ஏறக்குறைய ஒட்டியிருந்தவனாகத் தெரியும் செங்குட்டுவன்முதலியோர்க்கும் அந்நூற்றாண்டின் முற்பகுதியைக் கொள்ளத்தடையில்லை என்க. இவ்வரையறை, களவியலுரையெழுதியவர் தாங்காட்டிய பாண்டியனுக்குச் சமகாலத்தவராயிற் பொருந்துமல்லது, பிற்பட்டவராயின் நக்கீரர்காலம் இன்னும் குறைவுபடுமென உணர்க. எங்ஙனமாயினும், 5-ம் நூற்றாண்டுக்கும் மேற்பட்ட காலத்தை நக்கீரனார்க்குக் கூறுதல் ஏற்புடைத்தன்றென்பதை இச்செய்தி விளக்குமென்பது ஒருதலையாகும்.*

சேரன்-செங்குட்டுவனது வடயாத்திரையில் அவனுக்குப்பேருதவிபுரிந்தவர் கன்னர் என்போர்; இளங்கோவடிகள் இவரைக் கூறுமிடங்களிலெல்லாம் கன்னரெனப்பன்மையாக்குவதோடு, நூற்றுவர்கன்னர் ஆரியவரசர் ஐயிருபதின்மர் எனத் தொகைப்படுத்துவதாலும், அவர் ஒருகூட்டத்தவராயிருந்தனர் என்பது விளங்குகின்றது. இவரையே அவ்வடிகள் மாளுவவேந்தர் என்றும் குறிப்பிடுதல் முன்னரே விளக்கப்பட்டது.† இவற்றால், மாளுவதேசத்தை (Malwa) பலபகுதிகளாகப் பிரித்தாண்ட அரசர் கூட்டத்தவராகவே

---

* ஸ்ரீமாந்-து. அ. கோபிநாதராயரவர்களும் இவ்வபிப்பிராயமே கொள்வர். (செந்தமிழ். தொகுதி-6. பக்-58-59)

† இந்நூல். பக்-108.

இவரைக்கொள்ளுதல் பொருந்துமென்று தோற்றுகின்றது. சமுத்திரகுப்தனால் மாளுவதேசம் வெல்லப்பட்ட காலத்தில் அந்நாட்டின் பெரும்பாகம் ஒருவரன்றிப் பலகூட்டத்தாரால் ஆளப்பட்டுவந்ததென்றும், அவன் மகன் சந்திரகுப்தனால் அத்தேசம் குப்த-ஏகாதிபத்யத்துள் ஒன்றாக்கப்பட்டதென்றும் சரித்திரநூலோர்* கூறுவர். சேரன்-செங்குட்டுவன் 5-ம் நூற்றாண்டினனாயின், அவனட்பாசராய் மாளுவநாட்டை ஆண்டுவந்த கன்னரென்ற கூட்டத்தார் மேற்கூறிய குப்தர்காலத்துச் சிற்றரசர்களே என்று கருதல் தகும்.

இனி, தமிழறிஞர் சிலர், இளங்கோவடிகள் குறித்த "நூற்றுவர் கன்னர்"என்பது ஆந்திரவரசர் பட்டப்பெயரான "சாதகர்ணி" என்பதன் தமிழ் மொழிபெயர்ப்பென்றும், அதனால் "நூற்றுவர்கன்னர்" என்பது செங்குட்டுவன் காலத்து ஆந்திரவரசனான ஒருவனையே குறிக்கவேண்டுமென்றுங் கருதுவர். இளங்கோவடிகள் வாக்கை நோக்குமிடத்து, கன்னன், கன்னி என ஒருமையாற்கூறாது கன்னர்† எனப் பன்மையாகவும், கங்கைக்கரையிலிருந்த செங்குட்டுவன் அக்கன்னரை அவருடைய வளந்தங்கிய நாட்டிற்கனுப்பியதைக் குறிக்கும்போது, "ஆரிய வரசர் ஐயிரு பதின்மரைச்-சீரியல் நாட்டுச் செல்கென் றேவி" என்றும்‡ "மாளுவ வேந்தர்" என்றும் ஒருகூட்டத்தாராகவும் பாடப்பட்டிருத்தலால் "நூற்றுவர் கன்னர்"என்றதொடர் அரசனொருவனைக்குறிப்பதாகப் புலப்படவில்லை. ஒருகால், சாதகர்ணி என்பதன்

* V. A. Smith's Early History of India. p. 271, 276.

† சிலப். 26, 176.  ‡ ஷை. 27, 176—7.

மொழிபெயர்ப்பாகவே அத்தொடரமைந்ததாயினும், அஃது ஆந்திரவரசரின் குலப்பொதுப் பெயராதலால், 5-ம் நூற்றாண்டினனான செங்குட்டுவன்காலத்து ஆந்திரவரசனொருவனுக்கு அது வழங்கியிருத்தலுங் கூடும்; அதனால், 2-அல்லது 3-ம் நூற்றாண்டுச் சாதகர்ணியே நம் சேரன்காலத்தவனாதல்வேண்டும் என்னும் நியதியில்லை என்க.

சாஸனபரிசோதகரும் வேறு அறிஞர்சிலரும், கடைச் சங்கத்துக்கு எட்டாம் நூற்றாண்டையே ஏற்புடைய காலமாக்கி யெழுதுவர். இங்ஙனமாயின், அஃது, அப்பர் சம்பந்தர் முதலிய நாயன்மார்களையொட்டிய காலமாதல் வேண்டும். இந்நாயன்மார் அக்காலத்தவரென்பது, சாஸன பண்டிதருட்படச் சரித்திரவறிஞர் பலராலும் முன்னரே துணியப்பட்டதொன்றும். திருமாலடியாராகிய ஆழ்வார்களிற்சிலரும் இக்காலத்தவரே யாவர். இவ்வடியார்களுக்குரிய காலவிசேடத்தையே சங்கத்தரசர் புலவர்க்குங் கூறுவதாயின், அதன்முன் எத்தனையோ ஆக்ஷேபங்கள் எதிர்ப்படுதல் ஒருதலையாம். மேற்கூறிய நாயன்மார்க்கு நெடுங்காலத்துக்கு முன்பே கடைச்சங்கம் நடைபெற்றதென்பது, சங்ககாலத்தரசனான சோழன் - கோச்செங்கணான் பூர்வஜன்மத்திற் சிலந்தியாகப்பிறந்ததையும்* நக்கீரனார் சரிதப்பகுதியான 'தருமிக்குப் பொற்கிழியளித்த' வரலாற்றையும்† அவ்வடியார்கள் பாடுதலால் நன்குவிளங்குவதன்றோ? இன்னும் கி.பி. 770-ல் விளங்கிய ஜடிலவர்மன்-பராந்தகன் முன்னோராகப் பாண்டியரெண்மர் சின்னமனூர்வேள்விகுடிச் சாஸனங்களிற்

---

* தேவாரம். திருப்பாசூர்ப்பதிகம். விண்ணாகி-6. (அப்பர்.)

† ஷை. திருப்புத்தூர்ப்பதிகம். புரிந்தமரர்-3. (அப்பர்.)

கூறப்படுகின்றனர். இம்முன்னோருள், கடைச்சங்கமிருந்தவராக முன்னூல்களுட்கண்ட பிரபலபாண்டியர் பலருள் ஒருவரேனும் காணப்பட்டிலர். இதனாலும் 8-ம்நூற்றாண்டுக்குப் பல தலைமுறைகள் முற்பட்டவர் சங்ககாலத்தரசர்கள் என்பது வெளிப்படையன்றோ? இன்னும் இதனை விரிப்பிற் பெருகும்; சுருங்கவுரைக்குமிடத்து, இலக்கியப்பிரமாணங்களும் சாஸனவாதரவுகளும் அக்கொள்கைக்கு முற்றும் மாறானவையென்றே சொல்லலாம்.

இனி, செங்குட்டுவன்காலத்தவனாகச் சிலப்பதிகாரங் குறிக்கும் 'இலங்கைக்கயவாகு' என்ற அரசன்பெயர், மகாவமிசத்துள் 2-ம் நூற்றாண்டிலிருந்த ஒருவனுக்குக் காணப்படுகிறது; ஆயினும், அக்கஜபாகுவே நம் சேரன்காலத்தவன் என்பதற்குப் பெயரொற்றுமை ஒன்றைத்தவிர, உட்பிரமாணமொன்றும்* அந்நூலாற் பெறப்படவில்லை என்பது சரித்திர அறிஞர் நன்கறிவர். இங்ஙனம் பெயரொப்பொன்றையே பற்றி ஒரு முடிவுபடுத்தல் எங்ஙனம் இயலும்? இதனால், மேற்கூறிய எங்கொள்கைக்கமைந்த பிரமாணபலங்களை நோக்குமிடத்து, அக்கயவாகுபற்றிய கொள்கை உறுதிபெற்றதாகக் கருதக்கூடவில்லை. கயவாகு என்றபெயர், 5-ம் நூற்றாண்டின் முற்பகுதியுள் இலங்கையாண்ட ஒருவனுக்கு

---

* மகாவமிசமானது, கி. மு. 501 முதல் கி. பி. 301 வரை இருந்த இலங்கையரசர் வரலாறுகளையே கூறுவதாதலால், 5-ம் நூற்றாண்டினனாகிய நம் சேரன்காலத்திருந்த இலங்கைவேந்தன் செய்தியை அந்நூலிற் காண்டல் இயலாதாம். கி. பி. 301-க்குப் பிற்பட்ட இலங்கையரசர் வரலாறுகள், 1262, 1295-ம் வருஷங்களில் (ஏறக்குறைய மகாவமிசம் செய்யப்பட்டதற்கு ஆயிரமாண்டுக்குப்பின்) எழுதப்பட்டதென்பர். (Sketches of Ceylon History by *Sir-P. Arunachalam*. p. 29—30.

முன்புவழங்கிப் பின்பு மறக்கப்பட்டதுபோலும். இவ்வைந் தாம் சதாப்தத்தில், ததியன் (Dathiya) பிதியன் (Pithiya) முதலிய தமிழரசராவர் இலங்கையை வென்றவரெனப்படு கின்றனர்.* இவருள், ததியன் என்பவன், தலையாலங்கானத் தந்தநெடுஞ்செழியனால் வெல்லப்பட்டவனாக அகநானூற்றால் (39) அறியப்படும் திதியன்† என்பவன்போலும்; இவ்வாறு யின், இவன் ஏறக்குறைய நம்சேரன் காலத்தவனேயாதலால், மேற்கண்ட கொள்கைக்கு இதுவும் ஓராதாரம் ஆகும். இது வரை கூறிப்போந்தவற்றால், சேரன்-செங்குட்டுவனும் அவ னையொட்டியிருந்த அரசரும் புலவரும் 5-ம் நூற்றாண்டில்—அஃதாவது இற்றைக்கு 1450-வருஷங்கட்குமுன்—விளங் கியவரென்ற கொள்கையையே, பற்பல காரணங்களும் வற் புறுத்துதல் கண்டுகொள்க.

---

* Ibid. See—List of the "Kings of the Suluvamsa"

† இவன், பொதியின்மலையும் (அகம். 321) அறந்தை என்னும் ஊரும் (ஷை. 196) உடையவன்; அன்னி என்பவனைப் போரில் அழித்தவன் (ஷை. 45, 126, 145); அவ்வன்னிமகன் மிஞிலியால் அழிவுற்றவன் (ஷை. 196, 262). இனி, ததியன் என்ற பெயரும் பழையன்மாறன் என்ற பெயரும் கி. மு. முதனூற்றாண்டில் இலங் கைவென்ற தமிழரசர் சிலருக்கும் மகாவமிசத்திற் காணப்படுகின் றன. இவர்கள், செங்குட்டுவன்காலத்திருந்த திதியன் பழையன் இவர்களுக்கு முன்னோர்களாதல்வேண்டும். இவர்களை நம் சேரனோடு ஒட்டிக்கூறுவதில் தடைகள் பலவுள.

14-ம் அதி:—

# முடிவுரை.



மேலே விரிவாக எழுதிப்போந்த பல அதிகாரங்களாலும், சேரன்-செங்குட்டுவனது பெருவாழ்வின்வரலாறு ஒருவாறு வெளியாகும். இச்சேரர்பெருமானது பெருமையை நோக்குமிடத்து, இவனை நாம் "தென்னாட்டு அசோகன்" என்றே சொல்லல் தகும். அறிவாற்றல்களால் மட்டுமன்றி, சரித்திர உண்மையாலும் எவ்வாறு அசோகசக்கரவர்த்தி வடநாட்டில் மதிக்கப்பெற்றவனோ, அவ்வாறே, தென்னாட்டின் பழைமைக்குற்றவருள் செங்குட்டுவனே சிறந்தோனாவன். சங்கச்செய்யுள்களில் எத்தனையோ அரசர் செய்திகள் கூறப்பட்டிருப்பினும், இச்சேரன்போன்ற அத்துணைப் பெருமையுடையவராக அன்னோர் அறியப்படாததோடு, இவ்வளவாக அவர் வரலாறுகளை ஆராய்ச்சி செய்வதற்கும் இடமில்லை. இங்ஙனம், "புலவர் பாடும் புகழுடையோ"னாய், வீரம் நியாயம் தியாக முதலியவற்றால் விளங்கிநின்ற இச்சேரனுக்குப்பின், இவன் மகன் குட்டுவஞ்சேரலே பட்டமெய்தியவனாதல் வேண்டும். ஆனால், செங்குட்டுவன் பரம்பரையோர், அவனுக்குப்பின் தம் பழைய பெருமையினின்று சுருங்கிவிட்டவராகவே தோற்றுகின்றனர். இவர் வலிசுருங்கியகாலத்தே சோழபாண்டியரும், அந்நிய அரசராகிய பல்லவர் கங்கர் போன்றவரும் தென்னாட்டில் மாறிமாறி ஆதிக்கம் பெறுவாராயினர். இதனால், சேரவரசர் தம் புராதன ராஜஸ்தலமான வஞ்சிமாநகரை நெகிழவிட்டு, இயற்கையரண்பெற்ற மலைநாட்டுள்ள கொடுங்கோளூரை (Cranganore), தங்கள் தலைநகராகக் கொள்ளலாயினர். அவ்விராஜதானியில் இருந்து

மலைநாடாண்ட சேரமான்கள் பலராவர். இவருள்ளே, திருமாலடியாராகிய குலசேகர ஆழ்வாரையும், சிவனடியாராகிய சேரமான்பெருமாள் நாயனாரையும் நம்மவரெல்லாம் நன்கறிவர். இத்தகைய தனித்தமிழ்வேந்தர்களது ஆட்சியிடமாய்ச் செந்தமிழ்ப்பயிர் செழித்துவளர்ந்த அம்மலைநாடானது பிற்காலத்தில் மாறியநிலையை என்னென்பேம்! அச் சேரநாடு சில நூற்றாண்டுக்குள் பாஷையாலும் நடையுடைபாவனைகளாலும் வேறுபட்ட ஒரு தனித்தேசம்போல் இப்போது நிற்பது அதிசயமேயன்றோ? இவ்வாறாயினும், பழைய சேரவரசர் கிளைகள்மட்டும் இன்றும் அந்நாடாட்சி செய்து வருகின்றன. சோழபாண்டிய வமிசங்கள் மறைந்துபோய்ப் பல நூற்றாண்டுகளாயினும், சேரமரபினர்சிலர் திருவனந்தபுரம் திருசூர்களைத் தலைநகர்களாகக் கொண்டு அரசியல் புரிந்து வருவது, தென்னாடுசெய்த பாக்கியமே என்னலாம். இவர்களுள், திருவனந்தபுரவரசர் வஞ்சிபாலர் என்ற பட்டப்பெயரால் இன்றும் வழங்கப்பெற்றுவருதல் இங்கே குறிப்பிடத்தக்கது. இதனால், இவ்வேந்தர் வஞ்சிமாநகரையே தம் பூர்வராஜஸ்தலமாகக் கொண்டிருந்தவர் என்பது நன்கு விளங்கும். இவ்வமிசத்தரசரும், இவரால் ஆளப்படும் குடிகளும் பாஷைநடையுடைபாவனைகளால் வேற்று நாட்டார் போல இக்காலத்தில் மாறிநின்றனராயினும், பழைய தமிழ் வழக்க ஒழுக்கங்களையும், சொற்பொருண்மரபுகளையும் அவரிடத்துப்போலச் செந்தமிழ்நாட்டு மக்களுள்ளும் நாம் காண முடியாவென்றே சொல்லலாம். அவற்றையெல்லாம் ஈண்டு விரிப்பிற் பெருகும்.

முற்றும்.



ஸ்ரீ:

# பொருட் குறிப்பு.

# அநுபந்தம்



பக். வரி.

18. 15. இவன், சேய் மாந்தரன் எனப்படுதலால் முற்குறித்த மாந்தரம்பொறையன் இவன் தந்தைபோலும்.

24. கீழ்க்குறிப்பு‡ இளங்கோவேண்மாள்—இளங்கோ என்பது இருக்குவேள், இருங்கோவேள் எனப்படும் வேள்குலத்தாருக்கு வழங்கிய பெயராகத் தெரியவருகிறது. பிற்காலத்துச் சோழ மந்திரிகளுட் சிலர், தென்னவன் இளங்கோ வேளார் எனப்படுதலுங் காண்க (S. I. I. III. p 115.)

ஷை. * இ[illegible] பான் என்றது அருஞ்சகனை, இரு [illegible] திருவடிநிலை (சடகோபம்) தாங்குப[illegible]ன்; அன்றி ஸ்ரீபாதந் தாங்கி என்[illegible] றதலும் பொருந்தும்.

112. 12. சாத்தனார் கோவலன்கொலையுண்ட [illegible]யற்றை நேரிலறிந் தவரென்பது, "[illegible] கள்ளிருட் கிடந்தேன்" என்பது முதலாக அப்புலவர் செங்குட்டுவன் திருமுன் கூறியதை இளங்கோவடிகள் பதிகத்துப் பாடுதலாலும் அறியப்படும்.

118, 17. சாத்தனார், செங்குட்டுவனது வடயாத்திரையையும், அவன் நிகழ்த்திய பத்தினிப் பிரதிஷ்டையையும் மணிமேகலை 26-ம் காதையிறுதியில் (அடி. 77-91) சுருக்கமாகப் பாடியிருத்தல் அறியத்தக்கதாம்.

148. 15. சேரவேந்தரது பிறந்தநாள், [illegible] புகழத் தக்க சிறப்புடன் கொண்டாடப்பட்டதென்பதும், அக்காலத்துப் பலசமயவா[illegible]யோர்களும் அச்சேரனவையிற் குழுமித் தங்கள் கல்வித்திறமையைக் காட்டிவந்தனரென்பதும், மாங்குடிமருதனார் மதுரைக்காஞ்சியிற் கூறுதலால் தெரிகின்றன. (அடி-524—26).